# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

SHIVAJI
TAMIL WEEKLY
28th year
of Publication
29—9—1963

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ஆசிரியர்: திருலோகசீதாராம்


# காமராஜரே நமது தலைவர்



## புதிய முதலமைச்சர் உறுதி.

★

## கருத்து வேற்றுமைகளை நிரவி கட்சியை வலுப்படுத்துவோம்.

★

## தொண்டே நமது குறிக்கோள்.

★

பெருந்தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பிலிருந்து விலகி, மக்களிடை நேர்த் தொடர்பு கொண்டு, காங்கிரஸ் ஸ்தாபனத்தை வலுப்படுத்த வேண்டுமென்ற "காமராஜ் திட்டம்" அவரைப் பெற்றெடுத்த தமிழகத்தில் அமுலுக்கு வந்து விட்டது. தமிழகச் சட்டமன்ற காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பதவியைத் துறந்து காமராஜ் வெளியேறியதும், ஏகமனதாக இல்லை – விளையாட்டான போட்டியுடன் திரு. பக்தவத்ஸலம் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார்.

முன் கூட்டியே இந்த எண்ணம் தமக்கில்லையானாலும், போட்டின்றி நடைபெறும் தேர்தல் சுவையாயிராது என்பதற்காகவே தாம் ஒப்புக்குப் போட்டியிட, இறுதி நேரத்தில் முடிவுக்கு வந்ததாகப் போட்டி அபேட்சகர் திரு. ஆர். வி. சுவாமிநாதன் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியிருக்கிறார். அவரும் 22 வாக்குகள் வாங்கியிருக்கிறார் என்பது அலட்சியப் படுத்தக்கூடியதல்ல.

இதிலிருந்து ஒன்று தெரிந்து கொள்ளலாம் அரசியல் சாமர்த்தியங்கள் மலிந்து ஒருவரை ஒருவர் வென்று முன்னுக்கு வரும் போட்டி மனப்பான்மை என்பது, தமிழ் நாட்டில் கிடையவே கிடையாதென்றோ, அத்தகைய வில்லங்கள் மற்ற ராஜ்யங்களில் மட்டும்தான் இருந்து வருகிறது என்றோ எண்ணிவிடக் கூடாது என்பதற்கு இந்த விளையாட்டுப் போட்டி ஒரு உண்மையான எடுத்துக் காட்டு. விளையாட்டுக்களே ஒரு சமயம் வினையாகின்றன என்ற இயற்கை உண்மையை மறந்து விடுவதற்கில்லை.

இத்தனை நாட்களும் தமிழக அரசியலில் பதினைந்து சதவிகிதமாவது கருத்து வேற்றுமை இருந்துதான் வந்திருக்கிறது என்ற உண்மை இதனால் வெளிப்படுவதுடன், இந்த வேற்றுமை இதுகாறும் வெளிப்படாமல் மறைந்து இருந்து வந்ததற்குக் காரணம் தலைமை வகித்து நடத்தும் ஆற்றலில் காமராஜ் இணையற்றவராக விளங்கி வந்தார் என்பதே யாகும். முதலமைச்சர் பதவி அவரை விட்டு கை நழுவுகிறது என்ற ஜாடை தெரிந்தவுடனேயே மறைவான சக்திகள் வெளிப்படலாகின்றன.

தமது பொறுப்பை பக்தவத்சலத்திடம் ஒப்படைத்து விடுவதுடன் காரியம் தீர்ந்து விடவில்லையென்பதையும், பக்தவத்ஸலம் மந்திரி சபையும் தனது ஆட்சி ஆண்மையுடன் தொடர்ந்து வெற்றிகரமாகச் செயல்பட்டு, அகில இந்தியப் புகழை இழக்காமல் நிலைநாட்டிக் கொள்ளுமாறு ஒரு கண் எப்பொழுதும் வைத்தே தீரவேண்டுமென்பதையுமே இந்த "விளையாட்டுப் போட்டி" காமராஜருக்கு லேசாகக் குறிப்பால் உணர்த்துகிறதென்றே கொள்ள வேண்டும்.

தொடர்ந்து கால் நூற்றாண்டுக்கு மேல் எல்லா மந்திரி சபைகளிலும் அவர் பதவி வகித்து வருகிறார்; இப்பொழுது அவரே முதலமைச்சரும் ஆகிவிட்டார். புதுமுகம் விரும்புகிற சில பேருக்கு பக்தவத்சலம் பெயர் அலுப்புணர்ச்சியைக் கொடுக்கக் கூடும் என்பதில் உண்மை இருக்கிறது. ஆனால் புதுமை என்பதற்காக எதையாவது விரும்புவதோ, பழமை என்பதற்காக சத்தான விஷயங்களை விட்டு விடுவதோ எந்த வகையிலும் சரியாக இருக்க முடியாது.

தேசபக்தி, தியாகம், அனுபவம், ஆட்சித் திறம் ஆகிய எந்த வகையிலும் காமராஜருக்கு அடுத்த படியாக இந்தப் பெரும் பொறுப்பை அனாயாசமாக ஏற்கக் கூடிய சக்தி யாருக்காவது உண்டென்றால் அது பக்தவத்சலம் ஒருவருக்கே உண்டு என்பதை அறிவாளிகள் ஒப்புக்கொண்டே தீர வேண்டும்.

கடிவாளத்தைக் கொஞ்சம் கை நெகிழ விடுகின்ற ஆரம்ப கட்டத்திலேயே எதிர்காலம் அவ்வளவு லகுவானதல்ல என்ற கசப்பான உண்மையையே காமராஜர் இந்த நிகழ்ச்சியில் உணர்ந்திருப்பார். ஓரளவுக்கு இதனை அவர் முன் கூட்டி அறிந்திருக்கவும் கூடுமென்பதே நமது கருத்து. என்னென்ன நடக்கும் என்பதை அறிய முடியாத சாதாரண மனிதர் அவர் அல்லர். எனவே இத்தகைய 'வேலை'களையெல்லாம் சமாளிக்கும் வழியும் அவர் வைத்திருப்பார்.

புதிய முதலமைச்சர் காந்தியடிகளின் பிறந்த நாளில் தமது மந்திரி சபையை அமைப்பார். காமராஜர் பதவியை தம்மிடம் ஒப்படைத்திருப்பதன் அருமைப்பாட்டை நன்கு அவர் உணர்ந்திருப்பதை, தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் கட்சி அங்கத்தினர்களுக்கு அவர் விடுத்துள்ள வேண்டுகோள் தெளிவாகக் காட்டுகிறது.

அரசாங்கப் பொறுப்புக்கள் அவருக்கு ஒன்றும் புதிதில்லை. ஸ்தாபனத்திலும் அவர் குடு குடு கிழவர் என்பதிலும் ஐயமில்லை.

ஆயினும் காமராஜ் இருந்த இடத்தை வந்து வந்து பார்த்து ஏக்கப் பெருமூச்சு விடப் போகும் எண்ணற்ற முகங்களுக்கு இந்தப் புதிய முதலமைச்சர் எத்தகைய ஆறுதல் தரப் போகிறார் என்பதைப் பொறுத்தே இவருடைய தலைமையில் அமையும் புதிய மந்திரி சபையின் புகழும் வலிமையும் அமைந்திருக்கிறது.

காமராஜர் யாருக்கு என்ன செய்வாரோ மாட்டாரோ ஆனால் அனைவருக்கும் "அவர் அவசியம் நமக்கு நியாயம் வழங்குவார்" என்ற நம்பிக்கை குறையாமல் கவனித்துக் கொள்வதில் தலை சிறந்தவர். தம்மை நம்பியவர்களையும் அணுகியவர்களையும், தமக்காக வாழ்வெல்லாம் தொண்டு பூண்டு கிடந்தவர்களையும், குத்தலாகப் பேசி, அவர்களை கண் கலங்குமாறும் செய்யும் இயல்புடைய ராஜாஜிக்கும்

( 4-ம் பக்கம் பார்க்க )

# போர்க்குரல் எழுப்புவது யார்?

## இந்தியாவா ? பாகிஸ்தானா ?

சூழ் நிலைகளுக்கேற்றபடி நடந்துகொள்ளுவது வேறு! சந்தர்ப்ப வாதம் வேறு. இவ்விரண்டும் ஒன்றென நினைப்பது சிந்தனைக் குழப்பத்தின் விளைவாகும்; பாகிஸ்தான் தோன்றிய நாள் முதல் இந்தக் குழப்பத்திலேயே ஆழ்ந்து வருகிறது. முன்னுக்குப் பின் முரடான அதன் கொள்கையில் நிரந்தரமாக இருப்பது இந்திய விரோதக் கொள்கையொன்று தான்.

இந்தக் கொள்கையின் ஸ்திரத் தன்மையைப் பாதுகாப்பதற்காக ஆகிய ஆப்பிரிக்க மறுமலர்ச்சியின் முக்கிய ஒப்பந்தத்திலிருந்தே வெட்டிப் பிரித்துக்கொள்ள துணிந்து விட்டது. பாண்டுங் மகாநாட்டிலும், சூயெஸ் நெருக்கடியின் போதும், ஆகிய ஆப்பிரிக்க அபிலாஷைகளுக்கு எதிராகப் பாய்ந்தது.

இந்திய எதிர்ப்பு இயக்கத்துக்கு மதவாதம் மட்டும் போதாதென்பதை உணர்ந்து கொண்டனர். முஸ்லிம் மக்கள் நிறைந்த நாடுகளைக் கூட இஸ்லாம் மதத்துக்கு ஆபத்து என்ற கோஷத்தைக் கிளப்பி வசப்படுத்த முடியவில்லை. உதாரணமாகப் பொருளாதார மறுமலர்ச்சியை நோக்கிப் பீடு நடைபோடுகின்ற ஐக்கிய அரேபிய குடியரசின் கவனத்தை வேறு வழிகளில் திருப்ப முடியவில்லை.

ஆகவே ஆதாரங்களைத் தேடி அலைந்தது. இந்தியாவின் கூட்டுச் சேராக் கொள்கை அதன் மதச்சார்பற்ற ஆட்சியைப்போல வலிமை வாய்ந்தது. என்பதை உணர்ந்த பாகிஸ்தான் தலைவர்கள் வல்லரசுகளின் கூட்டில் சேர்ந்து திருப்தி கொள்ள நினைத்தனர். அவர்களிடமிருந்து கிடைத்த ஆயுதங்களை இந்தியாவுக்கு எதிராகப் பயன்படுத்தவும் தயங்க மாட்டோம் என்பதை அவர்கள் மறைக்கவும் முயற்சிக்கவில்லை. ஆகவே கராச்சியைப் பொறுத்த வரையில் அந்தக் கூட்டின் நோக்கம் ஜனநாயகத்தைப் பாதுகாப்பதோ, கம்யூனிஸம் பரவாமல் தடுப்பதோ அல்ல.

இந்த ராணுவ ஏற்பாட்டில் முன்னுக்குபின் முரணாக அம்சங்கள் பல இருந்தன. ஏனென்றால் பாகிஸ்தானின் ராணுவக்கூட்டு நாடுகள் இந்தியாவை எதிரியாகப் பாவிக்க விரும்பவில்லை.

அது மட்டுமல்ல; அதற்குப் பதிலாக இந்தியாவின் பொருளாதார வளர்ச்சியில் அரசியலும் சுதந்திரத்திலும் அக்கறை காட்டத் தொடங்கினார்கள்.

இந்த முன்னுக்குபின் முரணான அம்சங்கள் சீன—இந்தியத் தகராறில் வெட்ட வெளிச்சமாயின; ஆக்கிரமிப்பை எதிர்க்க இந்தியாவுக்கு உதவுவதற்காக மேற்கு நாடுகள் முன் வந்தது பாகிஸ்தானுக்குப் பிடிக்கவில்லை. ராவல் பிண்டியைப் பொறுத்த வரையில், சீன ஆக்கிரமிப்பு, அவர்களுடைய பரம்பரை இந்திய விரோதக் கொள்கைக்கு அனுகூலமானதென்று வரவேற்றனர்.

ராவல் பிண்டிக்கும் பீக்கிங்குக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் விளைவுகள் நாம் எதிர்பார்த்தவையே. அவர்களுடைய பிரசாரத்திலும், தூற்றலிலும் பூரண ஒருங்கிணைப்பு ஏற்பட்டு விட்டது. இந்தியா தான் ஆக்கிரமிப்பு நாடு என்று உலகம் நம்பவேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர். ஆனால் பீக்கிங்கின் கூக்குரலும், பாகிஸ்தானின் எதிரொலியும் யாரையும் ஏமாற்ற முடியாது; சமீப கால ஆக்கிரமிப்பை உலகம் அவ்வளவு சீக்கிரம் மறந்து விட முடியாது.

சீனா பெருமளவில் தாக்குதல் நடத்திய பிறகும் கூட பேச்சு வார்த்தைகள் மூலமும், நடுநிலைத் தீர்ப்பு மூலமும் தீர்வு காண்பதற்குத் தயாராக இருக்கிறோம். ஆனால் நமது பகுதியை நாம் ஒரு போதும் விட்டுக் கொடுக்கப் போவதில்லை.

இந்தியா ஆக்கிரமிப்பு நாடு என்று சீனா கூறிவருவதன் உண்மைத் தன்மை இங்கு விளக்க வேண்டியதில்லை. பீக்கிங்கின் கூற்று அவர்களையே தோல்வியடையச் செய்து விட்டது.

ராவல் பிண்டியின் விஷயம் ஓரளவு மாறுபட்டது. பாகிஸ்தான் காஷ்மீரை ஆக்கிரமித்து சுமார் 16 ஆண்டுகளாகி விட்டன; அதை எல்லாரும் மறந்து விட்டிருப்பார்கள் என்று பாகிஸ்தான் நம்பியிருக்கக் கூடும்.

உலக மக்கள் அதையெல்லாம் மறந்துவிட்டிருப்பார்கள் என்று நினைத்துத்தான் பாகிஸ்தான் அதிபர் அயூப் கான் இத்திய-பாகிஸ்தான் உறவை திரித்துக்கூற முனைந்திருக்கிறார். ஒரே பாகிஸ்தானின் தலைமைப் பொறுப்பை ஏற்பதற்கு முன் என்ன நடந்தது என்பது அவருக்குத் தெரியாமல் இருக்கக் கூடும்.

அப்படியாயின், காஷ்மீர் பற்றி ஐ. நா. கமிஷன் அளித்த தீர்ப்பை அவர் படித்துத் தெரிந்து கொள்ளுவது நலம். காஷ்மீரில் பெருமளவு பாகிஸ்தான் ராணுவம் இருந்ததைப் பார்த்து கமிஷன் ஆச்சரியத்தில் ஆழ்ந்து விட்டது. பாகிஸ்தானின் ராணுவம் அங்கு இல்லையென்று ஜாப்குல்லாகான் பாதுகாப்பு கௌன்ஸில் சாதித்தார். அதனால் நிலைமை முற்றிலும் மாறுபட்டு விட்டது என்று கமிஷன் அங்கத்தினர்கள் கருதினார்கள். காஷ்மீருக்குத் துருப்புக்களை அனுப்பியது உண்மைதான் என்று ஒப்புக் கொண்ட பாகிஸ்தான் தாங்கள் தான் ஆக்கிரமிப்பாளர் என்று மறைமுகமாக ஒப்புக் கொண்டுள்ளனர்.

ஆக்கிரமிப்பு அத்துடன் முடியவில்லை. பாதுகாப்பு கௌன்சிலின் தீர்மானங்களைப் புறக்கணித்து, சட்ட விரோதமாகப் புகுந்துள்ள பகுதிகளில் ராணுவ பலத்தைப் பெருக்கினார்கள்.

அது மட்டுமல்ல நேரடியாகவும், மறைமுகமாகவும் பயமுறுத்தி வந்தனர். காஷ்மீர் பிரச்னை பயங்கரமாக வெடிக்கும் நாள் வெகு தூரத்திலில்லை என்று ஆயுப்கான் சென்ற ஆண்டு குறிப்பிட்டார். பாதுகாப்பு கௌன்சிலிலுள்ள அவருடைய பிரதிநிதி, மலை ஜாதியினர் கட்டுக்கடங்காமல் சென்றுவிடக் கூடுமென்றும் கூறியிருக்கிறார். காஷ்மீரில் ரத்த ஆறு ஓடுமென்று அதிபர் ஆயுப்கான் சமீபத்தில் பேசியிருக்கிறார்.

இந்த வெளிப்படையான போர் நடவடிக்கைகளைப் பார்த்து இந்தியா எவ்வாறு நடந்து கொண்டது. முதலில் இப்பிரச்னையை ஐ. நா. சபையில் எழுப்பி சர்வதேசப் பரிசீலனைக்கு விட்டது அது ஆக்கிரமிப்பா? இந்தியப் படையினர் அனுகூலமான கட்டத்திலிருந்தும் கூட போர் நிறுத்தத்துக்கு ஒப்புக்கொண்டோம்; அது போர் நடவடிக்கையா?

பாகிஸ்தான் நம்மை எவ்வளவோ ஆத்திர மூட்டிய போதிலும், பொறுமை இழக்காமல் பாகிஸ்தான் பிரதிநிதிகளுடன் விவாதம் நடத்தினோம்; காஷ்மீரின் மீது நமக்குள்ள சட்ட நீதியானதும், தார்மீகமானதுமான உரிமை பற்றி சந்தேகமில்லாதிருந்தும் அவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தி வந்தோம்; போர் மறுப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திட முன்வந்தோம்; அதற்கெல்லாம் பதிலளிக்கும் வகையில் பாகிஸ்தான் முஷ்டியை மடக்கிக் காட்டியது.

ஆகவே ராவல்பிண்டி பீக்கிங்குடன் சேர்ந்து கொண்டு தாளம் போடுகிறதென்றால் அதற்குக் காரணமுண்டு; ஏனென்றால் இரண்டு நாடுகளும் இந்தியாவை ஆக்கிரமித்த குற்றத்திற்குள்ளானவை. ஒருங்கிணைந்த ஆக்கிரமிப்புக்கான புதிய ஏற்பாடுகள் அவைகளிடையே உருவாகி வருவதாகத் தோன்றுகிறது இரு நாடுகளுக்கிடையேயும் ராணுவத் தொடர்பு இருந்து வருவதாகச் செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன, பாகிஸ்தானின் நடவடிக்கைகள் கவலையளிப்பதாகப் பாதுகாப்பு மந்திரி சமீபத்தில் கூறியிருக்கிறார்.

பாகிஸ்தான், சென்ற மார்ச் மாதம்தான் எல்லை நிர்ணயம் பற்றிச் சீனாவுக்குக் குறிப்பு அனுப்பியிருந்தது. அவர்களிடையே ஏற்பட்டுள்ள தொடர்பு மெதுவாக வெளிவந்ததால், பாகிஸ்தானின் சந்தர்ப்ப வாதம் பூரணமாகத் தெரிய ஆரம்பித்திருக்கிறது.

காஷ்மீர் மீது சீனா கோரும் உரிமையைத் தீர்த்துவைக்க பாகிஸ்தான் மேற்கொள்ளும் முயற்சி பரிதாபத்துக்குரியது. லடாக் சம்பந்தமாக இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையே கருத்து ஒற்றுமையை ஏற்படக் கூடாதென்று பாகிஸ்தான் கடுமையாக எதிர்த்தது. ஐ. நா. இவ்விஷயத்தில் ஈடுபட்டிருப்பதால் மூன்றாவது நபர் அங்கு வரக்கூடாதென்பது பாகிஸ்தானின் வாதம்.

இந்த வாதம் பொருத்தமானதல்ல, நிரந்தரமாக நிலை நாட்டப்பட்ட அதிகாரம் இருப்பதால், பிற நாடு நாடுகளுடன் இவ்விஷயம் சம்பந்தமாகப் பேச்சு வார்த்தை நடத்துவதற்குரிய உரிமை இந்தியாவுக்கு இருக்கிறது.

இவ்விஷயத்தில் ஆக்கிரமிப்பு நாடு என்ற அந்தஸ்தைத் தவிர வேறு எவ்வித அந்தஸ்தும் ராவல்பிண்டிக்குக் கிடையாது. எது எப்படியிருந்தாலும், பாகிஸ்தான் உருவாக்கிய தார்மீக உரிமையும் இப்போது பறிபோகிவிட்டது. ஆனால் அவர்கள் பேச்சு வார்த்தை நடத்தியதோடு மட்டுமின்றி பிரச்னை ஐ. நா. வில் இருக்கும் போதே சீனாவுடன் ஒப்பந்தமும் செய்து முடித்திருக்கின்றனர்.

ஒரு புறம் பாகிஸ்தானின் அந்தஸ்தைப் பற்றித் திட்டவட்டமாக எதுவும் கூறாமல் இருந்து கொண்டு, அதே நேரத்தில் அந்தஸ்தை மறைமுகமாக அங்கீகரித்திருப்பது சீனாவின் இரட்டை வேடத்தை எடுத்துக் காட்டுகிறது. நமக்கு இக்கட்டான நிலையை ஏற்படுத்த வேண்டுமென்பது தான் சீனாவின் நோக்கம்.

பாகிஸ்தானின் இந்திய மனப்பிராந்திக்கு இது ஏற்றதாக இருக்கிறது. சீனாவுக்குத் தாளம் போட்டுக் கொண்டிருந்தால் இறுதியில் நன்மை விளையுமா என்பதைப் பாகிஸ்தான் சிந்தித்திருக்க வேண்டும்.

மதத்தையே பிரதான லட்சியமாகக் கொண்டுள்ள நாடு மத விரோத நாட்டுடன் கூடிக் குலாவுவது விந்தையிலும் விந்தையே. மேலும் ஒரு நாட்டுடன் ராணுவக் கூட்டில் சேர்ந்து கொண்டு இன்னொரு நாட்டுடன் அரசியல் சல்லாபத்தில் ஈடுபட்டிருக்கிறது.

[7-ம் பக்கம் பார்க்க]

# அதிசயம் ஆனால் உண்மை

## செயற்கை நாக்கினால் பேசவும் சுவையறியவும் முடியும்

முகத்திலுள்ள எந்த உருப்புக்கள் விபத்து மூலமோ அல்லது நோய் மூலமோ பாதிக்கப்பட்டால் அவைகளுக்குப் பதில் செயற்கை உருப்புகளைப் பொருத்தி சஸ்திர சிகிச்சை செய்ய முடியும் என்பதை டாக்டர்கள் நிரூபித்துள்ளனர். புற்று நோயினால் பாதிக்கப்பட்ட நாக்கை அடியோடு அகற்றிவிட்டு அந்த இடத்தில் செயற்கை நாக்கை பொருத்தலாம் என்பதுடன் அதனைக் கொண்டு பேசவும் சுவையறியவும் முடிகிறது என்பது கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. சஸ்திர சிகிச்சையில் இது மகத்தான சாதனையே!

சஸ்திர சிகிச்சையில் நிபுணர்கள் ஒன்று கூடி பிளாஸ்டிக் சஸ்திர சிகிச்சை முறை பற்றி விவாதித்தனர். விபத்து காரணமாகவோ, நோய் காரணமாகவோ முகத்திலுள்ள அவயவங்கள் பாதிக்கப்பட்டால் செயற்கை முறையில் அவைகளை அமைத்து இயற்கை அவயவங்களைப் போல செயல்பட நிபுணர்கள் வழி கண்டுபிடித்து விட்டனர். இந்த செயற்கை அவயவங்கள் தத்ரூபமாக இருப்பதால் அவை இயற்கையானவைதானா அல்லது செயற்கையானவையா என்று கண்டுபிடித்துச் சொல்ல முடியாது.

செயற்கை காதுகளையும் மூக்கையும் பொருத்தி சஸ்திர சிகிச்சை செய்வதில் டாக்டர்கள் பல நூற்றாண்டுகளாகவே சிரத்தைக் காட்டி வந்திருக்கின்றனர். மமுகு அல்லது ரெஸின் இவைகளைக்கொண்டு சீனர்கள் இந்த செயற்கை அவயவங்களை அமைத்து வந்தனர். 1002-ல் தனது 22 வயதில் காலமான சீன சக்கிரவர்த்தி மூன்றுவது ஆட்டோ செயற்கை மூக்கையே கொண்டிருந்தவர். அந்த மூக்கு தங்கத்தினாலானது.

புற்று நோயினால் பாதிக்கப்பட்ட நாக்கு அடியோடு எடுக்கப்பட்டு அதற்குப் பதிலாக செயற்கை நாக்கு சஸ்திர சிகிச்சை நிபுணர்களால் பொருத்தப்பட்டுள்ளது. இந்த செயற்கை நாக்கின் மூலம் நன்றாக சுவையறிய முடிகிறது என்பதுடன் நன்றாகப் பேசவும் முடிகிறது. நாக்குடன் பிணைக்கப்பட்டுள்ள தசைகளை நாக்கு எடுத்த பின்பும் செயற்கை நாக்குடன் இணைக்க முடியும் என்பதை நிபுணர்கள் கண்டு பிடித்துள்ளனர்.

இதேபோல் கண்ணிழந்தவர்களுக்கு இறந்தவர்களுடைய கண்களை உடனடியாக அகற்றி பொருத்தி வைத்து ஆப்ரேஷன் செய்வதன் மூலம் கண்கள் தெரியும்படிச் செய்ய முடியும். இதே போல் பேசும் சத்தம் வரும் தொண்டையையும் கூட சஸ்திர சிகிச்சை மூலம் சீர் செய்ய முடியும். விரல்கள் இழந்தவர்களுக்கும் செயற்கை விரல்களை அமைத்து அவை இயற்கையாக செயல்படும் படி செய்ய முடிகிறது. என்னதான் ஆனாலும் செயற்கைபாகங்கள் செயற்கை பாகங்கள்தான் அவை ஒரு நாளும் இயற்கையாக உடம்புடன் ஒட்ட முடியாது.

## சிகரெட் பிடிப்பதால் வரும் தீவினை

நெதர்லாண்ட்சில் சென்ற ஆண்டு 8142 பேர் சுவாசப்பை புற்று நோயால் இறந்ததாக கணக்கெடுக்கப் பட்டிருக்கிறது. 1945-ம் ஆண்டுக்குப் பிறகு வேறு எந்த நோயும் இவ்வளவு விரைவாகப் பரவியதில்லை என்று கூறப்படுகிறது. 1925-ம் ஆண்டில் இந் நோயினால் இறந்தவர் தொகை நூறு பேர்கள்கூட இருக்கவில்லை. ஆனால் 1946-ம் ஆண்டு அது 700 ஆக உயர்ந்தது. சிகரெட் பிடிப்பது தான் இந்நோய்க்கு முக்கிய காரணம் என்று டாக்டர்கள் ஒருமனதாக ஒப்புக் கொள்கின்றனர்.

சென்ற ஆண்டு இறந்து போன 8142 பேர்களில் 53 சதவிகிதத்தினர் 65 வயதுக்குக் குறைந்தவர்கள். இருபது சதவிகிதத்தினர் 55 வயதுக்குக் குறைந்தவர்கள்.

## போக்குவரத்து விதிகளை மீறுபவர்களுக்கு பயிற்சி

போக்கு வரத்து விதிகளை மீறுகின்றவர்கள் கட்டாயமாக ஒரு பயிற்சித் திட்டத்தின் கீழ் பயிற்சி பெற்றுக வேண்டுமென்று ஆம்ஸ்டர்டாம் போலீசார் விதி செய்திருக்கின்றனர். போக்குவரத்து விதிகளை மீறுகின்றவர்கள் அபராதம் கட்டுவதோடு, சில போலீஸ் நிலையங்களில் போக்கு வரத்து விதிகளில் பயிற்சி பெற்றுத் தேர்ச்சி பெறவும் வேண்டும். இது மோட்டார் ஓட்டிகளுக்கு மட்டுமல்லாது, மோட்டார் சைக்கிள், சைக்கிள் ஓட்டிகளுக்கும் உண்டு.

கோர்ட்டில் தண்டனை கிடைத்த ஆறு மாத காலத்திற்குள் இப்பயிற்சியில் தேறியாக வேண்டும். சில சமயங்களில் பயிற்சியில் தேர்வு பெறும் காலம் வரையில் 'டிரைவிங் லைசென்ஸ்' கொடுக்கப்பட மாட்டாது.

அப்பயிற்சிக் காலத்தில் கார்களை எங்கு எவ்வாறு நிறுத்தி வைக்க வேண்டும் என்பது கூட சொல்லித்தரப் படுகிறது.

## மிதக்கும் பெட்ரோல் "பங்க்"

நெதர்லாண்ட்சில் கோடை காலத்தில் பெரும்பாலான மக்கள் தங்கள் ஓய்வு நாட்களையும் நீண்ட விடுமுறை நாட்களையும் படகுகளிலும் மற்றும் பல விதமான மிதக்கும் சாதனங்களிலும் கழிக்கின்றனர். இங்குள்ள கால்வாய்களிலும் ஆறுகளிலும் ஏரிகளிலும் உல்லாசப்பிரயாணிகள் ஏராளமாக ஓய்வு பெறுவதைக் காணலாம். இவர்களின் சௌகரியத்திற்காக ஷெல் கம்பெனியார் ஒரு மிதக்கும் பெட்ரோல் 'பங்க்' கட்டி சேவை செய்து வருகின்றனர்.

இந்த மிதக்கும் படகில் காசலீன், லூப்ரிகேட்டிங் எண்ணெய், டீசல் எண்ணெய், பூடேன் எரிவாயு, என்ஜின் எண்ணெய்கள், கெரோசின் எண்ணெய் மற்றும் குடிநீர் ஆகிய பல பொருள்கள் விற்பனைக்காக வைக்கப் பட்டுள்ளன. அவசரகால ரிப்பேர்கள் செய்வதற்காக இதன் மீது ஒரு சிறிய ஒர்க்ஷாப்பும் இருக்கிறது.

கால்நடைகளுக்கு

## செயற்கை சத்துப் பொருள்

புரோட்டீன் சத்துப் பொருள்களில் ஒன்று லைசேன் என்ற சத்துப் பொருளை செயற்கை முறையில் செய்வதற்கு நெதர்லாண்ட்ஸ் அரசாங்க சுரங்கப் பிளவு (ஸ்டாட்ஸ் மிஜ்னன்) ஒரு தொழிற்சாலையை கட்டவிருக்கின்றனர். இச் சத்துப்பொருள் இயற்கையாக மீன், ரத்தம், எலும்புத்தூள், பால் பவுடர் ஆகியவைகளில் இருக்கிறது. ஆகையால் இவைகளைக் கலந்து கால் நடைகளுக்கு மற்ற உணவுப் பொருள்களுடன் கொடுக்கின்றனர். செயற்கை முறையில் தயாரிக்கப்படும் லைசேன் கால் நடைகளுக்கு நல்ல புஷ்டியைக் கொடுத்து தேவை அதிகமாகிக் கொண்டுவருகிற இறைச்சியை இன்னும் சத்துள்ளதாக்கும்.

1958-ம் ஆண்டில் ஆராய்ச்சி நிலையத்தில் சிறிய அளவில் உற்பத்தி செய்யப்பட்ட லைசேன் 1961-ம் ஆண்டில் இன்னும் பெரிய அளவில் உற்பத்தியானது. இப்போது பல கோடி பவுன் செலவில் கட்டப்பட்டு வரும் தொழிற்சாலை 1966-ம் ஆண்டில் உற்பத்தியைத் தொடங்கும்.

## செவிட்டுத் தன்மையை அறிவிக்கும் கருவி

மனிதர்களின் செவிப்புலனின் ஆற்றல் முன்பு எண்ணியிருந்ததை விட அதிகமாக இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கின்றனர். மாஸ்கோ மாநகரத்துச் சோதனைச் சாலையில் கண்டு பிடிக்கப்பட்ட இந்த புதிய அம்சம் உயிர் நூலிலும் மருத்துவத்திலும் முக்கிய இடம் பெறுகிறது. நொடிக்கு 200,000 அதிர்வு எண் உள்ள ஒலி அலைகள் வரை மனிதனது செவிகள் உணரக் கூடிய சக்தி வாய்ந்தவை என்று சந்தேகத்திற்கு இடமில்லாமல் நிரூபித்திருக்கின்றனர் சோவியத் விஞ்ஞானிகள்.

பொதுவாகக் கேளாமலிருக்கும் இந்த ஒலி அலைகள், ஒலி உண்டு பண்ணும் கருவியை காதுக்கு அருகில உள்ள கடினமான திசுக்கள் மேலேயோ அல்லது எலும்புப் பகுதிகள் மேலேயோ அழுத்திப்பிடிக்கும் பொழுது கேட்க ஆரம்பிக்கிறது.

இந்தப் புதிய கண்டு பிடிப்பு காது செவிடாக இருப்பதற்கு என்ன காரணம் என்று கண்டுபிடிக்க உதவுகிறது. திருத்த முடியாத காரணங்களால் காது கேட்காமலிருக்கிறதா அல்லது தாற்காலிகக் காரணங்களால் காது கேட்காமலிருக்கிறதா என்று அறிந்து கொள்ள இந்தக் கருவி வெகுவாக உதவும்.

தற்காலிகமான காரணமா அல்லது நிரந்தரமான நாசமா என்று அறுவை நிபுணர்கள் அறிந்து கொள்வது அவசியம். நிரந்தரமான நிவர்த்திக்க இயலாத காரணமாக இருப்பின் அறுவை சிகிச்சை செய்தும் பயனின்றிப் போகும்.

காது மந்தமாக இருக்கும் ஒருவன் இந்தக் கேளா ஒலியைக் கேட்க முடியுமென்றால் அறுவைச் சிகிச்சை அவனுக்குப் பலனளிக்கும்.

இந்தப் பரிசோதனையில் உபயோகிக்கும் கேளா ஒலி மிகவும் குறைந்த சக்தி உள்ளது. இது மற்ற ஆரோக்கியமான திசுக்களுக்கு கேடொன்றும் விளைவிக்காது.

நாம் இதுகாறும் ஒலிகளையும் அவைகள் கேட்கும் விதத்தையும் பற்றிக் கொண்டிருக்கும் கொள்கைகளை மேலும் அலசி ஆராய்வது அவசியம் என்பதை இந்தப் புதிய கண்டுபிடிப்பு தெளிவாகக் காண்பிக்கிறது.

★

## உடற் பயிற்சிப் போதகர்கள்

படை வீரர்கள் நூற்றுக்கு நூறு உடலுறுதி வாய்ந்தவர்களாக இருக்க வேண்டும். ஆகவே சைனியப் பயிற்சித் திட்டத்தில் உடலுறுதிப் பயிற்சிக்கு அதிமுக்கிய இடமளிக்கப்பட்டிருக்கிறது. புதிதாக படையில் சேர்ந்தவர்களுக்கு, பயிற்சி பெற்ற போதகர்கள் உடற்பயிற்சி அளிப்பதோடு, போர்முறைகளிலும் பயிற்சியளிக்கின்றனர். உடற்பயிற்சி உடலுறுதியை வளர்க்கிறது; போர்ப்பயிற்சி வீரர்களின தாக்குப் பிடிக்கும் திறமையையும், எப்போதும் விழிப்புடன் இருக்கும் தன்மையையும், சுய முயற்சியையும், சூழ்நிலைக் கேற்றபடி நடந்துகொள்ளுகிற திறமையையும், மனவுறுதியையும், தைரியத்தையும் வளர்க்கிறது.

இவர்களுக்குப் பயிற்சியளிக்கிற போதகர்கள் பூனாவிலுள்ள சைனியப் பயிற்சிப் பள்ளியிலும், சைனிய கமாண்ட் தலைமை நிலையங்களைச் சேர்ந்த பூர்வாங்கப் பள்ளிகளிலும் பயிற்சி பெற்றவர்களாவர். பூர்வாங்கப் பள்ளிகள் திறமை வாய்ந்தவர்களைத் தெரிந்தெடுக்கிறது; பூனாவில் அவர்களுக்கு உதவிப் போதகாசிரியர் பயிற்சியளிக்கப் படுகிறது.

பூர்வாங்கப் பயிற்சிப் பள்ளிகளில் ஆறுவாரகாலப் பயிற்சியடங்கிய நான்கு வகுப்புகள் நடைபெறுகின்றன.

விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள பயிற்சித் திட்டத்தில் பல்வேறு பயிற்சிகள் சேர்க்கப்பட்டுள்ளன. பல்வேறு ஆட்டப் போட்டிகளின் அடிப்படை விதிகள் பற்றியும் சொல்லித்தரப் படுகின்றன. சாதாரணப் பரீட்சைகளோடு உடலுறுதிப் போட்டியிலும், தலைமை வகிக்கும் திறமைப் பரிசோதனையிலும் அவர்கள் தேற வேண்டும்.

★



பீஹாரைச் சேர்ந்த பரௌனியில் புதிதாக நிர்மாணிக்கப்பட்டு வருகிற கனி எண்ணெய் சுத்திகரிப்பு சாலையில் வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருப்பதைப் படத்தில் காணலாம்.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

மலர் 28 | 29—9—1963 | வாரம் 47

# பாரதி விழா

காங்கிரஸ் கமிட்டிகள் இப்பொழுது ஆங்காங்கு பாரதி விழாக்கள் நடத்தி வருவதைப் பார்க்கிறோம். நாம் கலந்து கொண்ட சில விழாக்களிலிருந்து எதற்காக இந்த விழாவைக் கொண்டாடுகிறார்கள் என்பது நமக்கு விளங்கவில்லை. ஒருகால், காங்கிரஸ் கமிட்டிகள் ஆங்காங்கு பாரதி விழாக் கொண்டாட வேண்டுமென்று தலைமை ஸ்தானத்திலிருந்து கட்டளையோ, யோசனையோ கூறப்பட்டிருக்கிறதா என்பது தெரியவில்லை.

தேசபக்தி, சமூக சமத்துவம் ஆகிய அடிப்படைகளில் பாரதியாரின் விழாவைக் கொண்டாடுகின்ற முயற்சியில் காங்கிரஸ் கமிட்டிகள் ஊக்கத்துடன் முன்வரவேண்டியது அவசியமென்பதை நாம போற்றுகிறோம். ஆனால் அந்த விழாக்களில் பாரதியாரைப் பற்றிய விஷயங்கள் எதுவும் காணப்படுவதில்லை. பாரதியாரின் எழுத்துக்களைப் பற்றிக் கேள்விப்பட்டிராதவர்களெல்லாம் மேடையேறிப் பிதற்றுகிறார்கள். இந்த விழாக்களை ஏற்பாடு செய்யும் போது கட்சிப் பிரசாரங்களை நிறுத்திக் கொண்டு, பாரதியார் வலியுறுத்திய நாட்டன்பு போன்ற உயர்ந்த பண்புகளைச் சுவையாக விளக்கும் இளைஞர்களையும், மாணவர்களையும் பங்கு கொள்ளச் செய்து பட்டி மன்றங்கள் போலவும், கருத்தரங்கு போலவும், கருத்தரங்கு போலவும் நடத்தலாம். கோமாளிக் கூத்தாக ஆக்கி, பாரதியார் பெருக்கிருந்துவரும் கவர்ச்சியைக் குறைத்து விடாமல் இருக்க, இந்தக் கமிட்டிகளுக்கு ஒரு திட்டம் வகுத்துக் கொடுத்து என்ன நோக்கத்திற்காக இந்த விழாக் கொண்டாட வேண்டும் என்ற யோசனை உண்டாயிற்றோ, அது நல்லபடியாக நிறைவேறும்படி தலைமையிலுள்ளவர்கள் வழி காட்ட வேண்டியது அவசியம்.

★

# அரசாங்க 'பாரதி'

போன வருஷம் பாரதியின் பிறந்த நாள் விழாவை தமிழக அரசினர் பக்கபலமாக நின்று மிகுந்த ஆரவாரத்துடன் சென்னையில் விழா எடுத்தனர். இந்த வருடம் பாரதி பிறந்த நாள விழாவை விடாமல் மீண்டும் எடுத்து நடத்த அரசாங்கம் முன்வருவது நல்லது. சென்ற ஆண்டு நடைபெற்ற சொற்பொழிவுகள், கவியரங்குகள், கருத்தரங்குகள் பற்றிய விபரம், அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் பெருமன்றத்தாரின் அரிய முயற்சியுடன் 'எழுத்தாளன்' சிறப்பு மலரில் வெளிவந்த போதிலும் அதனைச் சீரமைத்து நிலையான நூல் வடிவாக்கும் சிரத்தை அரசாங்கத்திற்கு இருந்திருந்தால் அதனால் நல்ல பயன் உண்டாகியிருக்கும். இந்த ஆண்டில் மீண்டும் அப்படி ஒரு விழாவை நடத்த அரசாங்கம் துணை செய்வது பயன் தரும். விழாக்களின் விளைவாக ஆண்டுதோறும் ஒரு 'பாரதிப் புதையல்' நல்ல முறையில் மலிவு விலையில் அனைவருக்கும் கிடைக்குமாறு செய்யலாம். சென்ற ஆண்டு கல்வி அமைச்சர் இத்துறையில் பெருதவி புரிந்தவர். இந்த ஆண்டில் அவரே முதலமைச்சராகவும் இருக்கிறார். அவருடைய சிந்தனைக்கு இதை அறிவித்துக்கொள்கிறோம்.

★

## இந்தியாவில் இரும்புக் கனி உற்பத்தி

இவ்வாண்டு ஜூன் மாதத்தில் இந்நாட்டில் மொத்தம் 11,43,000 டன் இரும்புக்கனி வெட்டியெடுக்கப்பட்டுள்ளதாகத் தெரியவந்துள்ளது. பரிசீலனை மாத உற்பத்தியில் ஒரிஸ்ஸா ராஜ்யத்தில அதிகபட்சமாக 5,25,000 டன்னும், அதற்கடுத்தபடியாக பீஹாரில் 2,77,000 டன்னும், மைசூரில் 1,56,000 டன்னும், மத்திய பிரதேசத்தில் 1,52,000 டன்னும், ஆந்திர பிரதேசத்தில் 21,000 டன்னும் இரும்புக்கனி வெட்டியெடுக்கப்பட்டது. மஹாராஷ்டிரம், ராஜஸ்தான் ஆகிய ராஜ்யங்களில் முறையே 9,000 டன்னும், 3,600 டன்னும் வெட்டியெடுக்கப்பட்டது. இரும்பு உருக்காலைகளின் உபயோகத்துக்காக, இம்மாதம் மொத்தம் 9,77,000 டன் இரும்புக் கனி ரயில் மூலம் ஏற்றியனுப்பப்பட்டது. மொத்தம் 88,000 டன் ஏற்றுமதிக்காக அனுப்பி வைக்கப்பட்டது.

# கண்ணோட்டம்

— ரா. நா.

புதிய மத்ய நிதி அமைச்சர் டி. டி. கே. நல்லபெயர் எடுத்து விட்டார். கட்டாய சேமிப்பு திட்டத்தை வருமான வரி செலுத்தாதவர்கள், நகரங்களில் வீடுள்ளவர்கள், நிலவரி செலுத்துபவர்கள், விற்பனை வரிக் குட்பட்டவர்களைப் பொருத்தமட்டில் விலக்களித்து உத்தரவு பிறப்பித்திருக்கிறார். சென்னை ராஜ்ய நிதி அமைச்சர் திரு. பக்தவத்ஸலம் கூறியுள்ள மாதிரி, இந்த மாறுதலினால் சிறு சேமிப்பு இயக்கம் வலிமை பெறலாம்.

தங்கக் கட்டுப்பாட்டில் விசேஷ மாறுதல்கள் ஏற்பட்டு விட்டதாகக் கூறுவதற்கில்லை. இந்த கட்டுப்பாடு அமுலாவதற்கு முன் செய்யப்பட்ட தங்கநகைகளை அதே மாற்றில் புதுப்பித்துக் கொள்ளலாம், ஆனால் புதிய நகைகள் 14 காரட்டில்தான் இருக்க வேண்டும் என்று நிதி அமைச்சர் உத்தரவிட்டிருக்கிறார். நகை புதுப்பிப்பதில் பல சங்கடங்கள் ஏற்படலாம். ஒருவர் தம் வசமுள்ள நகைகளைப் புதுப்பித்தால் அது பழைய நகைதான் என்பதை எப்படிக்கண்டு பிடிப்பது. பழைய நகையைப் புதுப்பிக்கையில் சர்க்கார் அதிகாரிகள் வந்து அது புதிய நகைதான் என்றால் என்ன செய்வது. இந்த சந்தேகங்கள் பாரளுமன்றத்தில் புதிய உத்தரவு அறிவிக்கப்பட்டதுமே சில அங்கத்தினர்கள் கேட்டனர். இதை எல்லாம் ஆலோசனை செய்து தகராறின்றிப் புது உத்தரவுகள் அமுலாக அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும். ★

மாஜி நிதி அமைச்சர் திரு. மொரார்ஜி தேசாய், தாம் செய்த எல்லாக் காரியங்களையுமே பிரதமரின் அனுமதியின்பேரிலும், மந்திரி சபையின் ஆதரவு பெற்றும்தான் பிரகடனம் செய்ததாகக் கூறியுள்ளார். அப்படி இருக்க அவர் திட்டத்தின் பலாபலன்களைப் பற்றி அவர் விலகு முன்பே ஆராய்ந்தறிந்து செய்திருந்தால் அவர்மீது அவதூறு ஏற்படாமல் பாதுகாத்திருக்கலாம். ★

திரு. தாஸப்பா என்கிற மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்தவர் புதிய ரயில்வே மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவரது தகுதியைப் பற்றி யாரும் குறை கூறமுடியாது. ஆனால் ரயில் இலாகாவில் பல்லாண்டுகளாக உதவி மந்திரியாகப் பணியாற்றும் திரு. எஸ். வி. ராமஸ்வாமி, அல்லது ஷா நவாஸ்கான் ஆகிய இருவரில் ஒருவரை காபினட் மந்திரியாக நியமித்திருந்தால் அவர்களது அநுபவம் நாட்டிற்குப் பயன்படுவதுடன் அவர்களுக்கும் புது உற்சாகம் ஏற்படும். கே. வி. ரெட்டி விலகியதனால் மைசூருக்கு மத்ய அரசில் பிரதிநிதித்வம் அளிப்பதற்காக தாஸப்பாவை நியமித்திருந்தால் அவரை வேறு ஏதாவது ஒரு இலாகாவிற்கு மந்திரியாக நியமித்திருக்கலாம். ★

உ. பி. ராஜ்ய முதலமைச்சராக திருமதி சுசேதா கிருபலானி தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இந்தியாவிலே முதல் தடவையாக முதலமைச்சர் பதவி பெறும் பெண்மணி ஸ்ரீமதி சுசேதா அம்மையார்தான். இவர் முதலமைச்சர் பதவியிலிருந்து விலகிய திரு. ஸி. பி. குப்தாவின் கட்சியைச் சேர்ந்தவர். பார்லிமெண்டரி போர்டின் யோசனைப் படி கட்சிக் கூட்டத்தில் ரகஸ்ய ஓட்டெடுத்ததில் பெரும்பான்மை ஓட்டுகள் பெற்றார் இந்த முடிவை ஏற்று கட்சியினர் அவரை ஏகமனதாகத் தேர்ந்தெடுத்தனர். தேர்விற்குப் பின் திரு. ஸி. பி. குப்தாவும், பார்வையாளராகப் பணி புரிந்த திரு. காமராசரும் கேட்டுக்கொண்டபடி கட்சி அங்கத்தினர்கள் ஒற்றுமையுடன்பணிபுரியவேண்டும். ★

குஜராத் ராஜ்யத்தில் திரு. பலவந்தராய் மேதா முதலமைச்சராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். இவர் மாஜி முதலமைச்சரான திரு. ஜீவராஜ் மேதாவை எதிர்த்தவர். திரு. மொரார்ஜி தேசாயின் ஆதரவைப் பெற்றவர் என்றும் கூறப்படுகிறது. ஒரு குற்றம் செய்யாத தேச பக்தரைப் பதவியிலிருந்து விலக்கியது பெருமைப் படக் கூடிய விஷயமல்ல. போனது போய் விட்டது. இனியாவது பலவந்தராய் மேதா பழைய பூசல்களுக்கு இடம் கொடாமல் பணியாற்ற வேண்டும். ★

காமராஜ் திட்டத்தை அமுலாக்கும் முறையின் விளைவாக நிர்வாகம் ஸ்தம்பித்து விட்டது என்றும், வேண்டாதவர்களை வெளியேற்றவே காமராஜ் திட்டம் பயன்படுத்தப்படுகிறது என்று மக்கள் எண்ணும்படி காரியம் நடக்கிறது என்றும் மாஜி உணவு மந்திரி திரு. எஸ். கே. பாட்டில் குறைகூறுகிறார். ராஜிநாமாச் செய்த அமைச்சர்களுக்கு ஸ்தாபனப் பணி ஏன் அளிக்கப்படவில்லை என அவர் கேட்கிறார். "சும்மா இருப்பதே சுகம்" என்பதில் நம்பிக்கை இல்லாதவர் திரு. பட்டீல், அவருக்கு உடனடியாக ஏதாவது பணி அளித்திருந்தால் இப்படிப் பேசியிருக்கமாட்டார். மேலும் காமராஜ் திட்டத்தின் விளைவாக கட்சிப் பூசல்கள் மறைந்து தியாக உணர்வு மேலோங்கும் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் பல இடங்களில் புது முதலமைச்சர் தேர்வு விஷயமாக போட்டியும் பொறுமையும் தலைதூக்கி நிற்கிறது. இதைத் தவிர்க்க தலைவர்கள் உடனடியாக முயலவேண்டும். ★

ரஷ்யா-சீனா முரண்பாடு வலுத்து வருகிறது. ரஷ்ய சீன எல்லையில் சுமார் 5,000 இடங்களில் சீனர் ஆக்ரமித்துள்ளதாக ரஷ்யா குற்றம் சாட்டுகிறது. மேலும் இந்தியா மீது சீனா ஆக்ரமிக்கும் உத்தேசத்தை 1959 லேயே ரஷ்யா அறிந்து எச்சரித்திருப்பதாகத் தெரிகிறது. கொழும்பு சமரஸயோசனைகளை இந்தியா முழுதும் ஏற்றிருக்கையில் அவைகளைக் கொள்கை அளவில் ஏற்றிருப்பதாக சீனா கூறுவதையும் ரஷ்யா கண்டித்திருக்கிறது. சீனாவைத் தாக்குவதற்காக இந்தியாவுக்கு ரஷ்யா ஆயுத உதவி செய்ததாகச் சீனா கூறியதை மறுத்து, இந்தியாவைச் சீனா தாக்கியது ஏற்கனவே ரஷ்யா உதவிய ஆயுதங்கள் தான் என்றும் ரஷ்யா குற்றம் சாட்டியுள்ளது. சீனாவின் கபட நாடகம் அம்பலமாகிவிட்டது. ஸ்டாலின் மரணத்திற்குப் பிறகு உலக கம்யூனிஸ்டு தலைவராக வர மாஸேதுங்கு வரவிரும்பியது நிறைவேறவில்லை என்றுதான் இன்று சீனா போர்க்கோலம் பூண்டிருக்கிறது என்பதும் வெளியாகி விட்டது.

★

[முதற் பக்கத் தொடர்ச்சி]

வருகின்றவர்களின் மனவேதனையை மதித்து நல்ல வார்த்தை சொல்லி அனுப்பும் காமராஜருக்கும் இடையே உள்ள வேற்றுமையை தமிழ் மக்கள் நன்கு அனுபவித்திருக்கிறார்கள்.

புதிய முதலமைச்சர் குனிந்த தலை நிமிராமல் நேரே போய்க் கொண்டிருக்கும் இயல்புடையவர். பல தடவைகள் இதை நாம் நேரில் கண்டிருக்கிறோம். ரயிலடியில் அவரை வரவேற்பதற்காக நூறு பேர் மாலையும் கையுமாக நள்ளிரவில் காத்திருப்பார்கள். அவர் வண்டியை விட்டிறங்கிக் கழுத்தில் விழுந்த மாலையுடன் தரையைப் பார்த்துக் குனிந்தபடியே நடந்து சென்று காரில் ஏறிப்போய் விடுவார்.

வந்திருந்த கூட்டத்தை ஒருதடவை கண்ணால் பார்த்து அறிமுகப் புன்முறுவலுக்கு ஏங்கும் முகங்களுக்குப் பதில் முறுவல் ஒன்று அவர் சிந்தாமல் போய் விடும்போது, அந்த நள்ளிரவில் இவரைப் பார்க்க எதற்காக இவ்வளவு கஷ்டப்பட்டு வந்தோம் என்று பல பிரமுகர்களே அலுத்துக் கொண்ட சம்பவங்களை நாம் கவனித்திருக்கிறோம். முகங்களைப் பார்க்க அவர் பழகிக் கொள்ள வேண்டும். அப்பொழுது அவர்களின் உள்ளங்களையும் தெரிந்து கொள்ளலாம். தங்களை அவர் புரிந்துகொள்ளுகிறார் என்பதே ஆறுதலில் பாதி கிடைத்ததாக மற்றவர்களுக்கு சமாதானம் இருக்கும். அந்த சமாதானம் அவர்களது அன்பையும் நன்மதிப்பையும் பெருக்கும். வரம்பு கடந்து தனிச் சலுகை காட்டி யாருக்கும் எதையும் செய்யாத நேர்மையுடன் அத்தனை பேரின் அன்பையும் காமராஜர் கவர்ந்தார் என்றால் அவர் மனிதர்களின் உள்ளங்களைப் புரிந்து கொள்ளும் பேரிதயம் படைத்திருப்பதனால் தான். புதிய முதலமைச்சருக்கு நல்வரவு கூறும் போது அவருக்குப் பணிவுடன் இதனை எடுத்துக் காட்டுகிறோம்.

## இக்கால இலக்கியம்

# சில யதார்த்தவாதக் கவிகள்

— பி. கோதண்டராமன்

ஸ்ரீ அரவிந்தர் யதார்த்த வாதத்தின் மேன்மேலும் பெருகிவரும் அகப் போக்குகளை மேலை நாட்டுக் கவிஞர் சிலரின் படைப்புக்களின் மூலம் விளக்கிக் காட்டி, இறுதியில், வருங் காலக் கவிதையின் உதய காலச் சின்னங்கள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். ஜெர்மானிய மகாகவி கதேயின் அகப் போக்குகளை ஒரு சிறிது அறிந்தோம். பிரெஞ்சுக் கவிகளான லெகோந்த் தெ லீல் (1818-1894) வெர்லேன் (1844-1896), மெய்த்தர் லாங்க் (1862-1949), மல்லார்மே (1842-1898), ஆங்கிலக் கவி பிரௌனிங் (1812-1889), ஆகியோரின் அகப்போக்குகளையும் ஒரு சிறிது அறிந்து கொள்வோம்.

லெகோந்த் தெ லீல் என்னும் பிரெஞ்சுக்கவி சிறந்த கல்விமான்; கிரேக்க, லத்தீன் இலக்கியங்களை நன்கு பயின்று அவற்றை மொழி பெயர்த்தவர். இவர் வெப்ப மண்டல பிரதேசங்களையும் அவற்றில் வதிந்த பூர்விக, நாகரிகப் பண்பற்றவர்கள் எனக் கருதப்பட்ட மக்களையும்பற்றி பாடிய பாடல்கள் 1862-ல் வெளிவந்தன. அவற்றில் அவர் பல வண்ணங்களும் நிறைந்த கீழ் நாடுகள், அராபியப் பாலைவனச் சோலைகள், சிங்காரச் சூழ்வில் பொழுது போக்கிய பாரசீக அழகிகள் மரத்தடியில், சிலைபோன்று மோனத்தில் அமர்ந்த முனிவனின் குழியிட்ட ஆனால், ஒளிவீசிய கண்கள், இரும்புக் கம்பி போன்ற உறுப்புக்கள், நீண்டு வளைந்த நகங்கள், கானகத்தின் வெட்ட வெளியில் இளைப்பாறிய சிறுத்தைகள் ஆகிய விஷயங்களைப் பற்றிய உயிர்ச் சித்திரங்கள் பல தந்துள்ளார். இவர் தம் சொந்த உணர்ச்சிகளையும் தனித் தன்மைகளையும் தம் எழுத்தில் வெளிப்படக் காட்டாமல், பொருள் ஒன்றையே உள்ளது உள்ளபடியாகவும், கலையழகுடனும் சித்திரிக்க முழு மனச்சாட்சியுடன் முயன்றார் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆயினும், இவருடைய அகவுணர்ச்சிகள் எழுத்துக்களில் பலமாகப் பதிவு செய்தன. இவர் பிற நாட்டவரின் சிந்தனைகள், நாகரிகங்கள், உணர்ச்சிகளில் தாமும் வாழ முயன்றார். இதன் பயனாக இவற்றைப் பற்றிய எழுத்துக்களிலும் இவரது மன நிலை பரவிப் பிரதி பலித்தன.

யதார்த்த வாதம் மேலோங்கியிருந்த காலத்தில் உள்ளதை உள்ளபடிச் சித்திரிப்பதே படைப்பாளின் நோக்கமாக இருந்தது. ஆயினும், அவன் மனோநிலையையும் பிறரின் மனோநிலையையும் நுணுகி நோக்கி ஆராய்ந்தபோது, அந்நோக்கும் ஆய்வும் அவன் படைப்பிலும் புகுந்தன. நார்வீஜிய நாடகாசிரியரான இப்சன் (1828-1906) இடமும், ருஷிய மேதை டால்ஸ்டாய் (1828-1910) இடமும், ருஷிய நாவலாசிரியரிடமும் இதைக் காண்போம். படைப்பாளனின் அகம் படைப்பில் வியாபித்து அப்படைப்பின் முக்கியத்துவத்தைக் குறைத்துவிடுகிறது. அகம் அவ்வளவு தூரம் படைப்பின்மீது தன் நிழலையிட்டு அதைச் சற்றேறக் குறைய மறைத்துவிடுகிறது.

ஷேக்ஸ்பியர் (1564-1616) தன் படைப்புக்குப் பின்புறமாகத் தன்னை மறைத்துக் கொள்வதில் வெற்றியடைகிறான். தன்னைச் சூழ்ந்துள்ள உலகை அப்படியே படம்பிடித்துக் காட்டுவது போன்ற ஒரு மயக்கத்தை உண்டாக்கி விடுகிறான். அவன் காட்டும் உலகம் தன் சொந்த உணர்ச்சியில் பட்ட அல்லது கருத்தில் தோன்றிய உலகமல்ல. அவன் தனித்தன்மை அல்லது சுயரூபத்துடன் சம்பந்தப்படாத விசுவ, உலகமளாவிய உண்மையையே உள்ளது உள்ளபடிச் சிருஷ்டிக்கிறான். அவன் வாழ்க்கைக் கவி. அவனது கவிதையானது அலைமோதும் வாழ்க்கை, சிந்தனை, உணர்ச்சிகளில் ஒன்றிய ஒருவனின் கவிதையாகும். தன்னை மறைத்துக் கொள்வதே மகாகவி ஷேக்ஸ்பியர் படைப்பின் மூலாம்சமாக இருந்தது.

கவி பிரௌனிங்கோ (1812-1889) தன் காலத்திய மனோநிலையின் சிறந்த பிரதிநிதியாக விளங்கினான். தெரியவேண்டும் என்ற ஆவலுடன் அவன் யாவற்றையும் கூர்ந்து நோக்கினான். யதார்த்தத்தை விரிவாகவும் விவரமாகவும் சித்திரிப்பதே அவன் நோக்கம். அவனுடன் வாழ்க்கைக் கவியே. ஆனால் அவன் நோக்கியதைச் சுற்றிலும் அவனது சிந்தனை திருவிளையாடல் செய்தது. அவனது மனோமய சொரூபம் முன் நின்று தன் செல்வாக்கைப் பொறித்தது. அவன் தான் நோக்கிய பொருளைப் பகுத்து ஆராய்ந்தான்; அதைப் பற்றிச் சிந்தனை செய்தான். பொருள் மறைந்தது; படைப்பாளனே எங்கும் காணப்பட்டான்.

இங்ஙனமாக, படைப்பாளனின் அகச்சொரூபமும் கலைச் சொரூபமும் இக்காலத்தில் முன் எப்போதையும் விட அதிக முக்கியத்துவம் வாய்ந்தனவாயின. தான் என்பது இல்லாதிருத்தலும், தன்னைப் படைப்பினின்று அடியோடு அகற்றிவிடுதலுமே பழைய திறன். அது இப்போது அடியோடு போய் விட்டது போலும். இக்காலத்தவரிடம் கலைத் திறனும் கலையழகும் நிரம்ப உண்டு; ஆனால் அகப் போக்கு அபரிமிதமாகக் காண்கிறது. படைப்பாளன் தன் சுயரூபத்தை வலியுறுத்தி வளப்படுத்தினான். யதார்த்தத்தின் இப்புதிய போக்கு வெகுதூரம் சென்று விட்டது. இக்காலத்திய படைக்கும் மனம் யதார்த்தத்தினின்று தப்பியோட ஒரு வழியைத் திறந்து விட்டது. கவி புறப்பொருள்களைப் புறநோக்குடன் சித்திரிக்கையிலேயே மன ஆராய்ச்சியில் ஈடுபடலாகிறான். தன் உள்ளத்தின் மூலம், இதர உள்ளத்துடன் ஒன்றுவதன் மூலம், உண்மையை அறிய விரும்புகிறான். தன் படைப்பின் உள் நிலையைத் தன் சொந்த நோக்குடன் வர்ணிக்கிறான். அவன் உள்ளம் ஒரு சோதனைக்களமாகிறது.

யதார்த்தவாதக் கவிதையின் இத்திருப்பத்தைத் தான் பிரெஞ்சுச் சங்கேத இயக்கக் கவி வெர்லேனின் கவிதைகளில் காண்கிறோம். அவற்றில் புலன்களின் சூக்கு அனுபவங்கள் சாதாரண எல்லைகளை மீறி இயற்கைக்கு மாறான, இயல்பு கடந்த, தன்மையை வெளிப்படுத்துகின்றன. மெய்த்தர்லாங்க் பெல்ஜியக் கவியாயினும் பிரெஞ்சு மொழியிலேயே எழுதினார். அவர் நாடகங்களில் பாத்திரங்கள் செயல் புரிவதில்லை. அவை தம் காதல், ஆவல், பயம், துயரம், உள்நெகிழ்ச்சிகள் ஆகியவற்றை அரைகுறையாகக் கூவுகின்றன. பிரெஞ்சுக் கவி மல்லார்மே பொருள்களின் ஆத்மாவை நம் ஆத்மாவுக்கு வெளிப்படுத்த அகச் சங்கேத மொழிகளை நாடுகிறார். அறிவும் பகுத்தறிவும் ஆதிக்கம் செலுத்தும் இக்காலத்தின் இறுதி நிலை ஆத்மாவைத் தேடிக்கண்டு பிடிப்பதேதான். கவி தன் புலன்கள் மூலம் மறைபொருளை நாடும் ஒரு மறையோன் போலாகிறான். ஆனால் இப்போது இந்த இயக்கம் தன் கீழ்த்தர ஆத்மாவின் ஓர் இயக்கமாகவே உள்ளது. ஆயினும் நிலைமை இப்படியே நின்றுவிட போவதில்லை. அந்தர் ஞானம், தூய சைதன்னிய உணர்வு ஆகியவற்றின் மூலம் அவன் தன் உயரிய ஆத்மாவை வெளிப்படுத்தித்தான் ஆகவேண்டும். இத்தகைய மகத்தான ஆத்மிக எழுச்சி ஐரிஷ் கவிகளிடமும் இந்தியக் கவிகள் சிலரிடமும் காண்கிறது. இவர்கள் புதுயுகப் படைப்பாளர். இவர்களின் அந்தர் ஞானக் கவிதைக் கலையின் உதய சின்னங்கள் தோன்றுகின்றன. வருங்காலத்தைப் பற்றிய தீர்க்கதரிசனமும் அதை உருப்படுத்துவதற்கான திடசித்தமும் வேண்டும். நமக்குப் பழக்கமான உலகுக்கப்பால் வேறு உயரிய உலகங்கள் உள்ளன. இன்றைய கவியை இவை பற்றிய கருத்துக்கள் கவர்கின்றன. இறைவன் இயற்கையிலும் மனிதரிடையேயும், அகில விசுவத்திலும் உள்ளான். இவை இன்று மானிட அனுபவங்களாகி வருகின்றன. ஐயங்கள், கீழ்த்தர மூட நம்பிக்கைகள் இவையாவும் முறிந்து தூய ஆத்மீக நம்பிக்கையும் ஒளிதிகழும் பூரணஞானமும் மக்களிடையே முன்னேறுகின்றன. இன்னும் விடியவில்லை. ஆயினும் காலைக் குரல்கள் கேட்கின்றன.

ஆங்கிலக் கவிதையில் இப்புதுமைச் சின்னங்கள் எங்ஙனம் காண்கின்றன என்பதைப் பார்ப்போம். ●



நேபாவில் உள்ள சர்க்கார் விவசாயப் பண்ணையின் காட்சி யொன்றைப் படத்தில் காணலாம்.

# ஈயில்லா ஊரிலே நோய் இல்லையாம்

**ஈயைப் படைத்த ஈசன் அதை**
**போய் ஏன்படைத்தான் என்று**
**சொல்லாமல் போயினனே**
**அல்லல் பொறுக்குதில்லையே.**

என்று ஆக்டன் நாஷ் என்ற ஆங்கிலக் கவி எழுதிச் சென்ருன்.

கடவுள் சொல்லாமல் போன காரணத்தை நாம் ஊகித்துக் கொள்ளலாமே. ஈயிருக்குமிடத்துக்கு அருகில் எங்கோ ஏதோ அபாயகரமான அசிங்கம் இருக்கிறது என்று காட்டத்தான் ஈசன் ஈயைப் பிறப்பித்துப் பறக்கவிட்டான் என்பதில் ஐயமில்லை. அசுத்த அரசின் கொடிச் சின்னமன்ருே ஈ! அசுத்தத்தை அகற்றுங்கள் என்றே ஈ பாடுகிறதோ என்னமோ நமக்கு எச்சரிக்கையாக!

மனிதனுடன் ஈ தோன்று தொட்டு வாழ்ந்து வருகிறது. மனிதன் உணவைப் பகிர்ந்து மலத்தில் உட்கார்ந்து அவனுடைய ஆரோக்கியத்துக்கே உலை வைக்கிறது இந்த நன்றி கெட்ட ஈ; காலரா, வயிறு கடுப்பு, டைபாய்டு இன்னும் இதர குடல் ரோகங்களுக்கு ஈயே அடிப்படைக் காரணம். குஷ்டம், அடைப்பான், காசம் போன்ற கொடிய நோய்கள் பரவுவதற்கும் இந்தப் பறக்கும் யமதூதன் காரணம்.

ஈக்குப் பசி இறுதியில்லாதது, ஈக்குப் பிடிக்காத பொருளே இல்லை என்று கூடச் சொல்லலாம். இந்த நிமிஷம் அது உங்கள் தட்டிலுள்ள கனியை உண்ணும், மறுகணம் தரையில் உள்ள கசடில் கனி கொள்ளும், அடுத்த கணம் உங்கள் தட்டுக்கு வந்து விடும். சஞ்சலத் தன்மையுள்ள ஈ அங்கு இங்கு எனுதபடி எங்கும் படிந்து சுத்தம் அசுத்தம் இரண்டையும் பேதமில்லாமல் சொகுசாகக் கலந்து அனுபவிக்கும்.

நோய்களைப் பரப்ப சௌகரியமாக ஈயின் உடலமைப்பு இருக்கிறது. இதன் கால்களிலும், உடலின் அடிப்பாகங்களிலும் நுட்பமான மயிர் அடர்ந்துள்ளது. இம்மயிர்களில் அசிங்கமும் நோய் விஷம், பூச்சிகளும் ஒட்டிக்கொள்கின்றன. ஈயிடம் ஒருகெட்ட பழக்கம். புழக்கடை சஞ்சாரத்திலிருந்து புறப்பட்டு வந்து உங்கள் உணவுக் கலத்தில் அமர்ந்ததும் ஈ தன் உடலை உலுக்கித் தான் சுமந்து வந்த அழுக்குப் பொருள் அனைத்தையும் உங்கள் அன்னபானங்களில் கலந்து விடும்.

ஈ கெட்டியான உணவை உண்ண முடியாது. உணவை மிருதுப்படுத்த அது உமிழ் நீரைக் கக்கி காலால் தேய்க்கும். இச் செய்கையால் உணவு மிருதுப்படும். அப்படி மிருதுவான உணவை உண்ணும். உண்ட விடத்திலேயே மலமும் கழிக்கும். உண்ட வீட்டுக்கு இரண்டகம் கொண்டு வரும் இந்த ஈ.

மருத்துவன் நண்பனும் மரணத்தின் தூதுவனுமான இந்த ஈயால் உங்களுக்கு நோயும் செலவும் மட்டுமா ஏற்படுகிறது? எத்தனை நாள் படுக்கையில் கிடந்து வேலைக்குப் போகாமல் கை நஷ்டம் வருகிறது.

ஈயை வளராமல் தடுத்தால் பல இன்னல்களை தடுக்கலாம். ஈ வெகு விரைவில் இனப் பெருக்கம் செய்யும் பிராணி. ஒரு ஆண் பெண் சோடியின் எல்லா சந்ததிகளையும் வாழ விட்டால் ஐந்து மாதத்தில் 191,000,000,000,000,000 ஈக்கள் வளர்ந்திருக்கும் என்று கணக்கெடுத்துள்ளார்கள். நல்ல வேளையாக ஈக்கள் அவ்வளவு காலம் வாழ்வதில்லை.

ஈ வளராமல் இருக்க நீங்கள் செய்யவேண்டியவை:

1. சமயலறைக் கழிவுகள், பழத்தோல்கள் இவைகளை வீட்டுக்கு வெளியில் மூடி போட்ட தகரத்தில் போட்டு மூடி வையுங்கள். அன்றடம் அதை மண்ணில் புதைக்கவோ அப்புறப்படுத்தவோ ஏற்பாடு செய்யுங்கள்.

2. திறந்த கக்கூஸ்களை அமைக்கக்கூடாது. மூடி போட்ட தகரங்களைப் பயன்படுத்துங்கள். அல்லது மண்ணுல் மூடுங்கள். வார்தா வகை கக்கூஸ் கிராமங்களுக்கு எடுத்தது. இதனுல் கம்போஸ்ட்டும் கிடைத்து விடும். 3. குழந்தைகளை திறந்த வெளியில் மலம் கழிக்கப் பழக்காமல் கக்கூஸைப் பயன்படுத்தப் பழக்குங்கள். 4. ஈ உட்கார்ந்து இனப் பெருக்கம் செய்யக்கூடிய எந்த அழுக்கையும் விட்டுத் தரையிலிருந்து உடனுக்குடனே சுத்தம் செய்யுங்கள். 4. தண்ணீர் தேங்க விடாதீர்கள். 5. சமையல் அறையை செவ்வையாக கழுவுங்கள். 6. உணவுகளை மூடியே வையுங்கள். 7. கூடியவரை வலைக்கம்பிக் கதவை சமையல் அறையைப் பொருத்துங்கள். 8. வலை பீரோவில் பழங்கள் பால் பண்டங்கள் முதலிய வைகளை மூடி வையுங்கள்.

இதை முன்னெச்சரிக்கைகளை ஊர் முழுதும் எல்லோரும் எடுத்துக்கொண்டால்தான் ஈயால் வரும் பயங்கரங்களைத் தவிர்க்க முடியும். ஒரு ஊரில் ஒரு தெருவாரோ, ஒரு தெருவில ஒரு வீட்டாரோ எச்சரிக்கையாக இருந்து பயனில்லை. ஈ பல மைல்கள் பறந்து இனப் பெருக்கம் செய்ய திறன் படைத்தது. அதே போல் ஊர் முழுதும் எச்சரிக்கையாக இருந்து ஒரு வீட்டில் எச்சரிக்கை குறைந்தாலும் பயனில்லை.

டிடிடி. பி. செ. ஸி மருந்துகளால் ஈயை ஒழிக்கலாம். இத்தகைய மருந்துகளைப் பயன்படுத்தினுல் உணவுப் பொருள்களில் மருந்து கலந்து விடாமல் உணவுப் பொருள்களை அறையிலிருந்து அப்புறப்படுத்திவிட்டு மருந்தை அடிக்கவேண்டும்.

ஈ கோடை, மழை காலங்களில் மிக உபத்திரவம் தரும். இந்த பருவங்கள் வருமுன்பே ஈ போயின் நோய் போகும் என்று தானக நினைவில் இருக்கட்டும்.

★

# வாழ்த்துகின்றனர்

"இந்தா பகவத்! எவனே விவசாயஇலாகா நிபுணன் வேலைமெனக் கட்டுச் சொன்னதை வேதவாக்காக வைத்துக் கொண்டு இந்த பூஸா ஜெயன்டு நேபியர் புல்லை வயலில் போட்டு காசு, நிலம், நேரம், சிரமம் இதையெல்லாம் வீணுக்காதே"

தில்லிக்கு 15 மைல் தூரத்திலுள்ள சண்டோலா கிராமவாசியான பகத்துக்கு கிராமவாசியான அண்டை அயலார் செய்த உபதேசம் இது! அண்டை அயலார் மட்டுமா இப்படிச் சொன்னுர்கள்? அன்னையும் அவனைப் புது முயற்சிகளில் புத்தியிழவாதே என்று எச்சரித்தார்!

விஷயம் தெரியாத அண்டை அயலாரும் விவசாயம் தெரியாத அன்னை யாரும் சொன்னவையை அவர் அவர்களுக்கான மரியாதையோடு கேட்டுக் கொண்டு விஞ்ஞான விவசாயமுறை அறிந்த விஸ்தரிப்பு இலாகா அதிகாரி சொன்னபடி பகவத் பூஸா ஜெயன்ட் நேப்பியர் புல்லைப் பயிரிட்டார்.

பூஸா ஜெயன்ட்ரு நேப்பியர் புல் என்பதை புதுதில்லி விவசாய ஆராய்ச்சி நிலையத்தார் உருவாக்கியுள்ளார்கள். சோளத்தையும் நேப்பியர் புல்லையும் ஒட்டுச் செய்து உருவாக்கப்பட்டுள்ளது இது, சோளம் நேபியர் காண்டில் நல்ல குணங்களும் இந்தப் புதிய வகைப் புல்லில் இருக்கின்றன. கோடை வறட்சியில் சோளம் போல இது வறட்சியைத் தாங்கும், ஆகையால் ஆண்டு முழுதும் புல்லை அறுவடை செய்யலாம். சாதாரண நேப்பியரை விட இதில் $1\frac{1}{2}$ பங்கு புரதம் கூடுதல், மாடுகள் இதை மிகவும் ரசித்து தின்ன இதன் ருசியும் சத்தும் காரணங்கள்.

ஒரு பிகாவில் (அதாவது $\frac{1}{5}$ ஏக்கரில்) விஸ்தரிப்பு இலாகா தொடுத்த 2,500 பதியங்களை வரிசை நடவு செய்தனர். இடைவெளி $2\frac{1}{2}$ அடி விடப்பட்டது.

நடுவதற்கு முன்னுல் நகரகம் போஸ்ட்டு ஒரு டிரக் அடித்து 4 தடவை கொத்தி விட்டனர். எருவோடு 20 சேர் (40 ராத்தல்) சூப்பர் பாஸ்பேட்டும் 20 ராத்தல் அமோனியம் சல்பேட்டும் கலந்து போட்டர். கோடையில் 10 நாளைக்கு ஒரு பாசனம் கிணற்றிலிருந்து செய்தார்கள்.



பகவத் - தில்லியிலிருந்து 15 மைல் தூரத்திலுள்ள சண்டோலா கிராம விவசாயி. 10 அடி உயரம் வளர்ந்துள்ள ஜெயன்ட் நேபியர் புல் பயிரிடப்பட்ட தன் வயலில் நின்று புல் உயரத்தைக் காட்டுகிருர்.

பயிர் 8-9 அடி உயரம் வளர்ந்த அன்றுடன் வேண்டியதை அறுவடை செய்து கொள்கிருர்கள். தொடக்கத்தில் நாள் ஒன்றுக்கு 10-15 சேர் கிடைத்தது.

இப்போது மூன்று நான்கு மணு கிடைக்கிறது. ஒரு கோடியில் ஆரம்பித்து வயலில் நாளைக்குச் சிறிதளவாக அறுவடை செய்து வயலின் மறுகோடிவரை அறுவடை செய்து விட்டு மறுபடி முதல் பகுதியில் அறுவடை செய்வார்கள். இதற்குள் முதற் பகுதி வளர்ந்து விட்டிருந்தது. இப்போது மழைவேறு பெய்கிறதா? அதனுல் வளர்ச்சி விளைவாக இருக்கிறது.

ஜனவரி-பிப்ரவரி தவிர பாக்கி மாதங்களில் ஏக்கருக்கு 2750 மணு வீதம் புல் அறுவடையாகிறது.

இப்போது இந்தவூர் வாசிகளும், பகவத்தின் அன்னையும் பகவத்தை போற்றுகிருர்கள். இந்த புல்லை ஊரில் புகுத்திய விஸ்தரிப்பு அதிகாரிகளை வாழ்த்துகின்றனர். இதை இணையற்ற தீவனம் என்று வாழ்த்துகிருர்கள்.

★



நம் இந்தியாவில் தயாரிக்கும் பாரா சூட்டுக்கான பானல் துணியை இருவர் கத்தரிப்பதைப் படத்தில் காணலாம்.

★

# கிழக்கு ஐரோப்பா பொதுச் சந்தை

ஆறு மேற்கு ஐரோப்பிய நாடுகள் இணைந்து ஐரோப்பியப் பொதுச் சந்தை ஸ்தாபனம் ஒன்றை தற்காலத்தில் நிறுவி இயங்குவது போல சில கம்யூனிஸ நாடுகளும் இன்று ஐரோப்பாவில் இணைந்து ஒரு பொதுச் சந்தை ஸ்தாபனத்தை உருவாக்கியுள்ளன. மேற்கு ஐரோப்பியப் பொதுச் சந்தையில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு நாட்டிலும் பொங்கி எழும் தேசீய உணர்ச்சி பொதுவாக பரஸ்பர பொருளாதார இணைப்பை எவ்வளவு பாதிக்கிறதோ அவ்வளவுக்குக் கம்யூனிஸப்பொதுச் சந்தை ஸ்தாபனத்திலும், சீனாவினால் ஊக்குவிக்கப்பட்ட ருமானியா, இணைப்புக்கு ஓர் இடற்கட்டை போல் திகழ்கிறது. பொருளாதாரத் துறையில் ஒற்றுமை வளர்ச்சி இந்த ஸ்தாபனத்தின் குறிக்கோளாக இருந்த போதிலும் ஒருமை மனப்பான்மை இவர்களிடையே அகலவில்லை. ஒற்றுமை வளர்ச்சிக்கு இவ்வாறு மறைவில் இடையூறுகள் தலையெடுத்திருந்த போதிலும் பொதுவாக சில திக்குகளில் இந்த ஸ்தாபனம் முன்னேற்றம் அடைந்திருக்கிறது, என்பதை மறுக்க முடியாது. இந்த ஸ்தாபனத்தின் லக்ஷயம், ஒரு பொதுப் பொருளாதார இயக்கம் ஆனபடியால், காலளவில் நாடுகளிடையே நிலவும் எல்லைக் கோடுகள் மறைந்து போக வேண்டும் என்பதும், அப்படி எல்லைக் கோடுகள் மறைந்து போனாலும் மறையா இன வேறுபாடு உணர்ச்சி, படிப்படியாக நாளடைவில் மங்கிவிடக் கூடும் என்பது திண்ணம்; ஆகையால், எல்லைக் காவல், சுங்கம், முதலிய தடங்கல்களை அகற்றி ஒன்றுபட்ட பொருளாதார வளர்ச்சியைப் பேணுவது என்பதும், குருஷேவ் கொண்டுள்ள ஓர் முக்கிய கருத்து. இத்திக்கில் முன்னேற திட்டம் வகுப்பது ஐரோப்பியப் பொதுச் சந்தையை உருவாக்குவதற்கு மேற்கொண்ட திட்டங்களைக் காட்டிலும் கடினமாக இருக்கும் என்று கூறின் அது மிகையல்ல.

ஐரோப்பியப் பொதுச் சந்தையில் பங்கு கொண்டுள்ள மேற்கு ஐரோப்பிய நாடுகள் சாதாரணமாக வர்த்தகத் துறையில் அபிவிருத்தி கண்ட நாடுகள்.

சர்வதேச வர்த்தகத்திலும் ஈடுபட்ட நாடுகள். பொதுச் சந்தை என்ற ஒரு கூட்டணி இல்லாமலேயே அவைகளுக்கு வர்த்தகத்தில் முன்னேறுவதற்கு வேண்டிய வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனால் கிழக்கு ஐரோப்பிய நாடுகள் கம்யூனிஸக் கொள்கைக்கு அடி வருடிய நாடுகளானபடியால் இரண்டாவது உலகப்போர் முடிவுற்ற பின்னர் வர்த்தகத்திலும், பொருளாதாரத்திலும் அவைகள் ஒவ்வொன்றும் தனிப்பட்ட முறையில் சோவியத்தின் உதாரணத்தை பின்பற்றி இயங்கின. ஒவ்வொரு நாடும் அவைகளுக்குத் தேவையான எஃகு, மூலப் பொருள் முதலியவைகளை அவைகளே வேண்டியவாறு உற்பத்தி செய்து கொள்வதோ அல்லது பெருக்கிக் கொள்வதோ அவ்வழிகளில் ஈடுபட்டன. இதன் விளைவு முதலீடு செய்த அளவுக்கு உற்பத்திப் பெருக்கம் காண முடியவில்லை. உதாரணமாக 1959 இல் கிழக்கு ஜெர்மனி 85 அல்லது 90 சதவீதம் இயந்திர உற்பத்தி செய்தது. ஆனால் ஹங்கேரியில் எஃகு செய்வதற்கு வேண்டிய மூல பொருள்களை இறக்குமதி செய்வதற்குச் செலவழித்த அன்னிய செலாவணித் தொகை எஃகை அப்படியே இறக்குமதி செய்திருந்தால் செலவழிக்க நேரிட்டிருக்கும் செலாவணித் தொகையைக்காட்டிலும் அதிகம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

உற்றுநோக்கினால் கிழக்கு ஐரோப்பிய நாடுகளில், தொழில் வளர்ச்சித் துறையில் தொழில் உற்பத்தி ஸ்தாபனங்களை நிர்மாணிப்பதோ அல்லது தொழிலாளர்களின் திறமையைப் பயன்படுத்திக் கொள்வதோ அவைகள் விவேகமான முறையில் கையாளப் படவில்லை என்பது நன்கு புலப்படும். மேலும் அவர்களின் கொள்கையில் சர்வதேச வர்த்தகம் இடம் பெறவில்லை, ஆகையால் இந்நாடுகளில் வர்த்தக இயக்கத்தை மாற்றி அமைப்பது என்பது எளிதான காரியம் அல்ல.

ஆயினும் மாறுதலுக்கு வழிதேட திட்டங்கள் நிறைவேறி வருகின்றன. இதையொட்டி 1949 இல் அல்பேனியா, புல்கேரியா, ஸெகோஸ்லோவேகியா, கிழக்கு ஜெர்மனி, ஹங்கேரி, போலாண்டு, ருமானியா, ஐக்கிய சோவியட் நாடு இவைகளின் பிரதிநிதிகள் கொண்ட குழு ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது.

"கம்கான்" என்ற குறுகிய பெயர் கொண்ட இக்குழு வர்த்தகத் துறையில் பரஸ்பர உறவை வளர்ப்பதற்கு வழிதேடும். மூலப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு 15 ஆண்டு திட்டம் ஒன்றைக் கையாண்டு ஒவ்வொரு நாடும் செயலாற்றும். ஒரு நாடு உற்பத்தி செய்யும் பொருளை மற்றொரு நாடு உற்பத்தி செய்ய முன்வராது. உதாரணமாக, ருமானியாவிலும், ரஷ்யாவிலும் எண்ணெய் உற்பத்தி அபரிமிதமானபடியால் செயற்கை முறையில் எண்ணெய் உற்பத்தி செய்ய கிழக்கு ஜெர்மனி அனுமதிக்கப்படாது. தவிர, ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு பொருள் உற்பத்தியில் கவனம் செலுத்த வேண்டும். இவ்வாறு செய்வதில் திறமையிலும், தொழில் நுட்பத் துறையில் அபிவிருத்தியும் காண வாய்ப்பு ஏற்படும். இதையொட்டி ஹங்கேரி, ரயில், மோட்டார் வண்டிகள் உற்பத்தியைப் புறக்கணித்து விட்டு கோதுமை உற்பத்தியில் கவனம் செலுத்த வேண்டும். பல்கேரியா லாரிகள் உற்பத்தியைக் கைவிட்டு விட்டு இயந்திர ஆயுதங்கள் செய்ய முன்வர வேண்டும். ருமானியா இயந்திர அமைப்புக் கலையை விட்டு விட்டு சுரங்கத்திற்கு வேண்டிய கருவிகளை உற்பத்தி செய்ய முன்வரவேண்டும்.

இத்தகைய திட்டங்கள் ஏட்டளவில் மிகவும் கவர்ச்சிகரமாகத் தோற்றமளிக்கின்றன. திட்டம் நிறைவேறினால் சில நாடுகளில் வெகு காலமாக இயங்கி வரும் கைத்தொழில் சாலைகள் மூடப்பட வேண்டி வரும்.

இது தவிர, "கம்கான்" கூட்டணி நாடுகள் ஒன்றுக்கொன்று சுங்கம், எல்லைக் கட்டுப்பாடு முதலிய நிர்வாக நிபந்தனைகளுக்கு எவ்வாறு தீர்வு காணப்போகிறது என்பது மற்றொரு பெரிய பிரச்சனையாகும். இப்பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பது எளிதாகயிருந்தால் பின்னர் இக்கூட்டணி நாடுகள் பரஸ்பரம் தொழில் வளர்ச்சிக்கு முதலீடு செய்து கொள்வதோ அல்லது தொழிலாளர்கள் படையை ஒருவருக்கொருவர் வழங்கி உதவிக் கொள்வதோ இம்முறையில் செயலாற்ற வழிதேடல் வேண்டும். ஆனால், இத்திக்கில் அவர்களின் நாட்டத்தை செலுத்தியதாக இது காரும் அறிகுறிகள் ஒன்றும் காணப்படவில்லை.

★

## போர்க் குரல்

[ 2-ம் பக்கத் தொடர்ச்சி ]

ஒன்றுக்கு மேற்பட்ட ராணுவக் கூட்டுகளில் சேர்ந்துள்ள பாகிஸ்தான் இந்தியாவை ஆக்கிரமிப்பு நாடு என்று வருணிக்கிறது. இந்தியா ராணுவக் கூட்டு எதிலும் சேர்ந்த நாடல்ல; நமக்குக் கிடைக்கும் ஆயுதங்களைப் பாகிஸ்தானுக்கு எதிராகப் பயன்படுத்த மாட்டோம் என்றும் திட்டவட்டமாக அறிவித்துள்ளோம். அம்மாதிரி உறுதி மொழியைத்தர பாகிஸ்தான் தயங்குகிறது. அதுமட்டுமல்ல, தங்களிடமுள்ள ஆயுதங்கள் அனைத்தையும் பயன் படுத்துவோமென்றும் பிற நாடுகளுடன் கலந்தாலோசிக்க நேரமிருக்காதென்றும் சமீபத்தில் பாகிஸ்தான் அதிபர் அறிவித்திருக்கிறார்; ஆத்திரமூட்டும் விதத்தில் பேசுவது யார்? போர்க் குரல் எழுப்புவது யார்?

இந்தியா பாகிஸ்தான் நல்லெண்ணத்துக்கும், ஒத்துழைப்புக்கும் வரலாறும் பூகோள அமைப்பும் துணையாக இருக்கிறது என்பதாக நமது பிரதம மந்திரி கூறியிருக்கிறார்; ஆனால் சீனாவின் எண்ணம் இந்தியாவும் பாகிஸ்தானும் வலிமையிழந்து இருக்க வேண்டும் என்பதாகும். இதை யெல்லாம் பாகிஸ்தான் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

★

## விவசாயிகளுக்கான விசேஷ அறிவிப்புகளும் பள்ளிக்கூட ஒலிபரப்புகளும்

விவசாயிகளுக்கு அக்கறை ஊட்டக்கூடிய விசேஷ ரேடியோ அறிவிப்புகளின் முக்கியத்துவம் பற்றி, நேற்று திருச்சிராப்பள்ளி ரேடியோ நிலையத்தில் நடைபெற்ற கிராம நிகழ்ச்சித்திட்ட ஆலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் வற்புறுத்தப்பட்டது. திருச்சி ரேடியோ நிலைய டைரெக்டர், ஸ்ரீ எஸ். வி. நடராஜன் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

விவசாயம், கால்நடைப் பராமரிப்பு ஆகியவற்றின் பிரச்சினைகள் பற்றி விவசாயிகளுக்கு எடுத்துரைப்பதற்கான விசேஷ நிகழ்ச்சிகள், கூடுமானவரை, சாகுபடிப் பருவகாலங்களையும் தேவைகளையும் அனுசரித்த ரீதியில் திட்டமிடப்பட்டு ஒலிபரப்பப்பட வேண்டும் என்று, கமிட்டி யோசனை கூறியது.

பள்ளிக்கூட ஒலிபரப்பு நிகழ்ச்சிகளைக் கமிட்டி பாராட்டியது; போதனை ஒலிபரப்புகளுக்காக எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் ஒரே சீரான ரீதியில் அவகாசம் ஒதுக்குவதற்கான சாத்தியக்கூறு பற்றிக் கமிட்டி விவாதித்தது. பொதுப் பரீட்சைகளில் உச்ச அளவு மார்க்குகள் வாங்கியுள்ள திறமை மிக்க மாணவர்களுடனும் அவர்களுடைய ஆசிரியர்களுடனும் பேட்டிகள் நடத்துவது, பரீட்சை சமயங்களில் மாணவர்களுக்கு ஒரு உத்வேகம் அளிப்பதாக இருக்கும் என்று கருதப்பட்டது.

உயர்தரப் பள்ளிகளையும் சிறிய பள்ளிகளையும் இணைப்பதற்காகத் தற்போது அமுல் நடத்தப்பட்டு வருகிற திட்டம் பற்றி விளக்குவதற்கு, கல்வி இலாகா டைரெக்டர், இதர கல்வித் துறை அதிகாரிகள் ஆகியோரின் விசேஷ ஒலிபரப்புகள் பயனுள்ளவையாக இருக்கும் என்பதும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

கிராம நிகழ்ச்சிகளின் ஒலிபரப்பு நேரத்தை இரவு 7 மணிக்கும் 8 மணிக்கும் இடையே மாற்றுவது உண்மையிலேயே அனுகூலம் பயப்பதாக இருக்கும் என்று கமிட்டி கருத்துத் தெரிவித்தது.

ஜூலை — செப்டெம்பர் காலத்தில் 'ஊர்ச் சாவடி', 'விஞ்ஞானக் கூடம்', 'சரித்திரக் கதைகள்', தேச பக்திப் பாடல்கள் முதலியவை போன்ற புதிய நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்பட்டு வந்திருப்பதை கமிட்டி பாராட்டியது.

கல்வி இலாகா டைரெக்டர், ஸ்ரீ என். டி. சுந்தரவடிவேலு, தஞ்சாவூர் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி, ஸ்ரீ எம். டி. தியாகராஜ பிள்ளை, புதுச்சேரியைச் சேர்ந்த ஸ்ரீ ஸி. பட்டாபிராம நாயுடு, ஸ்ரீமதி. ஆர். ராஜலக்ஷ்மி ஆகியோர் அக்கூட்டத்துக்கு வந்திருந்தனர். ●

## விவசாயத்துக்கு தண்ணீர் தேவை

விவசாயத்துக்கு வாய்க்காலில் தண்ணீர் விடுங்கள் என்று திருச்சிக்கு வருகை தந்த திரு. காமராஜ் அவர்களிடம் விவசாயிகள் மனு கொடுத்தார்கள்.

"புள்ளம்பாடி கால்வாயிலும், புதுக் கட்டளை மேட்டு வாய்க்காலிலும் தண்ணீர் விட்டால் ஏரிகளில் தண்ணீர் நிரப்பி விவசாயத்துக்கு பயன்படுத்துவோம். இப்போது மாடுகள் குடிக்கவும், நாற்று நடவும் தண்ணீர் இல்லாமல் கஷ்டமாக இருக்கிறது" என்ற அந்த மனுவில் விவசாயிகள் கேட்டு இருக்கிறார்கள். ●

# இன்றைய அல்ஜீரியா

★

அல்ஜீரியாவில் இயங்கும் இன்றைய அரசில் நிலை மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கிறது என்று கூறின் அது மிகையாகாது. உலக சரித்திரத்தில் பல நாடுகளில் கலவரங்களும், புரட்சிகளும் அவ்வப்பொழுது தலையெடுத்து அதனால் மக்களின் உயிர்களுக்கு ஏராளமாகச் சேதம் விளைந்திருக்கிற விவரங்களை யாவரும் அறிவர். ஆனால் அல்ஜீரியாவில் தலையெடுத்த புரட்சி இதற்கு முன் கண்டிராத அளவுக்கு இந்நாட்டில் ஒவ்வொருவருடைய உயிரையும் அதிவிரைவில் கொள்ளை கொண்டிருக்கிறது. சென்ற ஓர் ஆண்டில் மட்டும் நாட்டில் பல பெருந்தலைகள் மறைந்து போயிருக்கின்றனர். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சமீப காலத்தில் மறிந்த ஃபெர்ஹாட் அப்பாஸ் என்பவர்.

இவர் நாட்டு தேசீய இயக்கத்தில் பங்குகொண்ட பெரிய அரசியல் வாதிகளுள் ஓர் தலைசிறந்தவர். சாதாரணமாக பிரான்ஸ் அல்ஜீரியாவிற்கு எளிதாகச் சுதந்திரம் கொடுக்க முன்வராது ஆகையால் சுதந்திரத்தை அதன் கைகளிலிருந்து பிடுங்க வேண்டும் என்று சில லக்ஷ்யவாதிகள் இயக்கிய எஃப் எல் என். கூட்டத்தில் இவர் கலந்து கொண்டார். பல ஆண்டுகளாகத் தம் நாட்டு நிர்வாகம் பிரெஞ்சு நிர்வாகத்தில் சிறந்த முறையில் நிர்வகிக்கப்படும் ஓர் நாட்டைப் பின்பற்றி நிர்வகிக்கப்பட வேண்டும் என்பது இவர் கொண்ட அவா.

ஆனால் சிறந்த ஓர் தேசிய வாதியாகிய இவர் தன்னுடைய பெயரை எஃப். எல். என். கூட்டத்துடன் பிணைத்துக் கொண்டது ஓர் வருந்தத்தக்க செயல் என்று எண்ணப்படுகிறது. ஆயினும், இவருடைய வீழ்ச்சி பிரான்ஸில் பெருமிதங் கொள்வதற்கு இடங் கொடுத்தால் அதுவும் வருந்தத்தக்கது என்றுதான் கொள்ளல் வேண்டும். ஏனெனில், அவருடைய வீழ்ச்சி இந்நாட்டுக்குப் பெருத்த நஷ்டத்தை விளைவித்திருக்கிறது. இவரைப் போன்ற ஓர் அல்ஜீரியா வாசி பிரான்ஸுடன் கூடி ஒத்துழைக்க முன்வர வாய்ப்பில்லாமல் போனது இந்நாட்டுக்கு ஓர் பெருத்த நஷ்டமே.

ஃபெர்ஹாட் அப்பாஸ் அல்ஜீரியாவின் நாடு கடத்தப்பட்ட தற்காலிக நிர்வாகத்தின் பிரதமராகப் பணியாற்றினார். சென்ற ஆண்டில் பென் பெல்லா சிறையிலிருந்து விடுதலை பெற்றதும் இவர், பென் பெல்லா, இராணுவத் தலைவர் கர்னல் பௌமீதியன், இவ்விருவரும் கூடித் துவக்கிய கட்சியில் பங்குகொண்டார். பென் பெல்லா மிகவும் வெற்றிகரமாக நாட்டில் இயங்கும் இதரக் கட்சிகள் ஒவ்வொன்றையும் ஒழித்துக் கட்டிக் கொண்டிருக்கும் பொழுது இவர் அரசியல் முறை நிர்ணயக் குழுவின் தலைவராகச் செயலாற்றினார் பென் பெல்லாவிற்கும் அவருடைய போக்கில் ஓர் நிதானத்தை உண்டு பண்ண இவர் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்.

புதிய அரசியல் அமைப்பில் ஜனாதிபதியின் கையில் முழு அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பதையும், சட்டசபை வெறும் பெயரளவில் தான் இயங்க வாய்ப்புக் கொடுக்கப்பட்டிருப்பதையும் கண்டு இக் காரணங்களால் இவருக்கு பென் பெல்லாவுடன் மோதல் ஏற்பட்டது. அரசியல் அமைப்பு மார்க்ஸியம் லெனினிஸத்தை யொட்டியிருந்த போதிலும் நாளடைவில் இது பாஸிஸத்திற்கு இடம் கொடுக்கும் என்று இவர் குறை கூறினார். எஃப். எல். என். கட்சியும் நாட்டில் மக்களால் வெறுக்கப்பட்ட கட்சியாகி விட்டது என்றும், நாட்டுக்குப் பொருந்தியது சோஷலிஸ அமைப்பு நிர்வாகம் என்றும், பொருளாதாரத் துறையில் பண மூட்டைக்கு இடமில்லை என்றும் இவர் அச்சுருத்துவார். கருத்துரிமை கம்யூனிஸ்ட்டுகளுக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்றும், நாடு கூட்டு சேரா கொள்கையைக் கடைபிடிக்க வேண்டும் என்றும் இவர் வலியுறுத்துவார்.

இதுகாறும் நாட்டுப் பிரதமராக இருந்த அஹமத் பென் பெல்லா இவ்வாண்டு ஸெப்டம்பர் மாதம் 16ஆம் தேதியன்று வாக்காளர்களின் பெருத்த ஆதரவைப் பெற்று நாட்டின் முதல் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவருடைய நிர்வாகம் எவ்வாறு இயங்கும் என்று அவரை நன்கு அறிந்தவர்கள் ஹேஷ்யம் கூறுகிறார்கள். “கடந்த 45 ஆண்டுகளாக சோஷலிசத்திற்குத் தொண்டாற்றியவர்களைக் காட்டிலும் புரட்சிக்காரர்களாகிய நாங்கள் ஒன்றும் அவர்களுக்கு மேம்பட்ட முறையில் தொண்டாற்றப் போவதில்லை” என்று அவர் அடிக்கடி கூறுகிறார். “சிறைச்சாலைகள் இல்லாமல் புரட்சிகள் வெற்றி பெறாது” என்று இவர் மேலும் அடிக்கடி வலியுறுத்துகிறார். மேற்கூறிய இக்கருத்துக்கள் இவருடைய செயல்களில் பிரதிபலிக்கின்றன. உள்நாட்டு நிர்வாகம் எப்படி இயங்கிய போதிலும் பிரான்ஸும், யூ. எஸ்ஸும் இந்நாட்டுடன் நட்பை வளர்ப்பதற்கும், போதிய உதவிகளை அளிப்பதற்கும் நல்லெண்ணம் கொண்டுள்ளன.

ஆனால் இந்நாடுகளிலிருந்து உதவியைப் பெற்றுக் கொண்டு அல்ஜீரியா ஓர் குயூபா போலவோ, சீனா போலவோ, சோவியட் நாடு போலவோ அல்லது, எகிப்தைப் போலவோ நிர்வாகத்தை அமைத்துக் கொள்ளுமா என்பது ஓர் பெரிய வினா. இப்பொழுது அல்ஜீரியாவின் நிர்வாக அமைப்பு ஒரு மனிதனின் கீழ் (அல்லது சில மனிதர்களின் கீழ்) இயங்கும் ஓர் சர்வாதிகாரம். எதிரிகள் யாவரும் சிறையில் தள்ளப்பட்டோ அல்லது நாடு கடத்தப்பட்டோ உள்ளனர். சட்டசபை ஓர் படிவான கூட்டம். எதிர்க் கட்சிகள் இயங்குவதற்கு வாய்ப்புக் கொடுக்கப்படவில்லை. ஆகையால் நாட்டில் இயங்குவது ஒரே கட்சி. தொழிலாளர் சங்கங்கள் கீழ்ப்படிந்த சங்கங்கள். இத்தகைய சூழ் நிலையில் உள்ள ஓர் நாடு தன்னுடைய பிற நாட்டு உறவை எவ்வாறு வளர்க்கப் போகிறது என்பது மற்றோர் வினா.

இப்பொழுது அல்ஜீரியா என்ற பெயரைச் சொன்னால் அது உலக நாடுகளில் பல அரசியல் வாதிகளின் உள்ளங்களில் பல உணர்ச்சிகளை எழுப்புகிறது. ஆயினும், இந்நாடு முழு சுதந்திரம் பெற வேண்டுமென்றால் அந்த லட்சியத்தை அடைய இந்நாட்டு மக்களே தான் பாடுபட முன் வர வேண்டும்.

★



1787-ல் அரசியல் அமைப்பு மகாநாட்டுத் துவக்கத்தில் ஜார்ஜ் வாஷிங்டன் பேசுவதைக் காட்டும் ஓவியம். இது ஜூனியாஸ் புருட்டஸ் ஸ்டெர்ன்ஸ் என்பவர் தீட்டியதாகும்.

---

**அரியலூர் டி. மு. கோ.**
**E.P. 577/63 S.C. 339/52**

ராஜங்கம் மேடோவர் –1 —வாதி
குட்டாறு சாம்பான் —பிரதிவாதி

ஷை நம்பர் டிக்கிரி துகைக்காக 1-ம் பிரதி வாதியின் ஸ்தாவர சொத்துக்களை ஏலவிற்பனை செய்ய 1-10-63-ல் ஈரங்கி. ஆஜராகி க்ஷியை தெரிவிக்காவிடில் ஒருதலைபக்ஷமாக தீர்மானிக்கப்படும் என்பதை அறியவும்.

R. ரெகுநாதசாரியார்,
2/5716/85 அட்வகேட்.

---

**திருச்சி டி. மு. கோ.**
**O. P. 81/63**

வைத்திலிங்கம் பிள்ளை —மனுதார்

மனுதார் சதர்ன் ரயில்வே எம்ப்ளாயி கோவாப்ரேடிவ் சொஸைட்டி லிமிடெட்டில் இறந்த மாரியப்ப பிள்ளையின் பேரில் இருந்து வரும் துகை ரூ. 1000 பெற்றுக் கொள்ள தனக்கு பாத்ய சர்டிபிகேட் டைக்க மனுக்கொடுத்து 10-10-63-ல் வாய்தா. ஆட்ஷேபனை உள்ளவர்கள் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம்.

S. முத்துசாமி,
4/5718/87 அட்வகேட்.

---

**திருச்சி டி. மு. கோ.**
**O. P. 87/63**

(In the matter of the Estate of the deceased Susai Manickam Udayar)

தி. தா. குட்டப்பட்டிலிருக்கும் ஷை இறந்த சூசை மாணிக்கம் உடையார் சம்சாரம் செபஸ்தியம்மாள் 1, ஷையார் மக்கள் அந்தோனி உடையார் 2, ராயப்ப உடையார் 3, அண்ணமலை 4, மாரியம்மாள் 5 —மனுதார்கள்
Nil —எதிர்மனுதார்கள்

மனுதார்கள் ஷை எஸ்டேட் வ்ஷயமாய் கோர்ட்டிலிருந்து வரவேண்டிய துகைக்கு தங்களுக்கு பாத்திய சர்டிபிகேட் கோரி மனு கொடுத்து 7-10-63ல் ஈரங்கி. ஆக்ஷேபணையுள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ளலாம்.

G. பாலசுந்தரம்,
1/5615/84 அட்வகேட்.

---

**விழுப்புரம் டி. மு. கோ**
**O. S. 353/61**

முத்துலக்ஷ்மி அம்மாள் —வாதி
குட்டியப்பக் கவுண்டர் வகையரு —பிரதிவாதிகள்

புதுச்சேரியை சேர்ந்த ராமனுதபுரத்திலிருக்கும் நாராயணசாமி கவுண்டர் பெண்ஜாதி சின்ன பொண்ணு அம்மாள் —9-ம் பிரதிவாதி

ஷை நெம்பரில் அடகு சொத்துக்களை ஏலம்போட்டு துகை வசூலித்துக்கொடுக்க வாதி மனு கொடுத்து இஸ்தியார் ஷரத்துக்களை நிர்ணயிக்க 9-10-63ல் வாய்தா. ஆக்ஷேபனையை ஆஜராகி தெரிவித்துக் கொள்ளாவிடில் எக்ஸ்பார்ட்டியாக முடிவாகும் என்பதை அறியவும்.

சி. வீரராகவய்யர்,
3/5717/86 அட்வகேட்.



Edited & Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Annual Subscription Including 4 Special Numbers : Individuals Rs. 5 Institutions Rs. 10. Single copy six nP (Madras office : 12/2, Nallethambi Mudali St., Triplicane, Madras-5.)